KALKI 27.12.87 ரூ. 2.

# கல்கி



# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்

காம்ப்ளானில் மட்டுமே குழந்தைகளுக்குத் தினந்தோறும் தேவைப் படும் 23 ஆதார உணவுச் சத்துக்கள் உள்ளன.

குழந்தைகளின் வளர்ச்சிப் பருவம் சாதாரணமாக 15 அல்லது 16 வயதிலே நிறைவு பெறுகிறது. இந்த வளர்ச்சிக்கு அடிப்படை யான ஊட்டச்சத்து புரத மாகும். ஆகவே, உங்கள் குழந்தைகளுக்கு இப்போது காம்ப்ளான் மிகமிக அவசி யம். புரதச் சத்துக்களிலேயே தலைசிறந்த பால்புரதம் 20% கொண்டது காம்ப்ளான். அதுதவிர, மேலும் 22 ஆதார உணவுச் சத்துக்களும் காம்ப்ளானில் உள்ளன.

குழந்தைகள் ஆசையோடு கேட்டு அருந்தும் சுவைகளில் கிடைக்கிறது காம்ப்ளான்.

Complan

COMPLETE PLANNED FOOD

CHOCOLATE FLAVOUR

23

மூலாதார சத்துணவுகள்
திட்டமிட்ட விகிதங்களில்

**காம்ப்ளான்® — திட்டமிட்ட பரிபூரண உணவு**

GX/35/203 TML

# இட ஒதுக்கீடு பற்றி இவர்கள்...



• வை. பாலசுந்தரம்



• ராமச்சந்திர நாடார்



• பாலசுப்ரமணியம்



• மணிவர்மா



• பொன். பரமகுரு

**பொன் பரமகுரு (முக்குலத்தோர் சங்கம்):**

'ஜாதி இரண்டொழிய வேறில்லை' என்ற கொள்கையுடையவன் நான். நடைமுறைச் சமுதாயத்திலும் இந்நிலையே வந்துவிடுமானால் தனி இட ஒதுக்கீடு பிரச்னையும் இருக்காதுதான். ஆனால் இந்நிலை ஏற்படும் வரை சமுதாய ரீதியாகவும் பொருளாதார ரீதியாகவும், கல்வி ரீதியாகவும் பின் தங்கியிருக்கும் ஜாதியினருக்கு இட ஒதுக்கீடு அவசியம் தேவை. அதுவும் ஜாதி அடிப்படையிலான மக்கள் தொகை விவரங்களைக் கண்டறிந்து அதன்படி இடஒதுக்கீடும் செய்தால் அதை நான் வரவேற்பேன். இவற்றோடு பெண்களுக்கென்று தனிப்பட்ட ஒதுக்கீடு செய்வது பற்றியும் அரசு யோசிக்க வேண்டும். அப்போதுதான் உண்மையான சமுதாய முன்னேற்றம் காண முடியும்.

**வை. பாலசுந்தரம் (அம்பேத்கார் மக்கள் இயக்கம்):**

தாழ்த்தப்பட்டோருக்கான இட ஒதுக்கீடுகளை ஒவ்வொரு பத்தாண்டுகளாக நீடித்துக் கொண்டே போகிற அரசின் போக்கு ஆரோக்கியமானதாக இல்லை. எத்தனை முறைதான் நீடிப்புச் செய்து கொண்டே இருப்பது? இது தாழ்த்தப்பட்டவர்கள் மீது மற்றவர்களுக்கு ஒருவித வெறுப்பு ஏற்படவே வழி செய்யும். எனவே, இந்தச் சலுகைகள் இத்தனை வருடங்களுக்குத்தான் என்று வரையறை செய்ய வேண்டும். சுதந்திரம் பெற்று நாற்பதாண்டு காலமாகியும் தாழ்த்தப்பட்ட சமுதாயம் மேம்படாததற்கு என்ன காரணம் என்று கண்டறிந்து களைய வேண்டும். அதன் பிறகு இப்போதுள்ள தனிச் சுடுகாடு, தனித் தண்ணீர்க் கிணறு, தனிக் காலனி என்கிற பாகுபாடே இருக்கக் கூடாது. அந்நிலையில் இம்மாதிரியான சலுகைகளை நிறுத்திக் கொள்ளலாம். இப்போது கூட கல்வித் தரத்திலும், பொருளாதாரத்திலும் சமூக அந்தஸ்திலும் உயர்ந்து விட்ட ஓர் ஐ. ஏ. எஸ். அதிகாரி வீட்டுப் பிள்ளையை — அவன் எந்த ஜாதியாக இருந்தாலும் சரி — பொதுக் கோட்டாவில் போட்டியிடச் சொல்லிவிட்டுக் கிராமப்புற, தாழ்த்தப்பட்ட ஏழை மாணவனுக்கே முன்னுரிமை தர வேண்டும்.

**பாலசுப்ரமணியம் (பிராமணர் சங்கம்):**

பல நூறு வருடங்களாக அமுத்தப்பட்டிருந்த தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடியினர் ஜாதிகளுக்கான இட ஒதுக்கீட்டை நான் எதிர்க்கவில்லை. எனினும் அது ஒரு குறிப்பிட்ட காலம் வரைதான் இருக்க

வேண்டுமேயொழிய நீண்டு கொண்டே போகக் கூடாது. குறிப்பிட்ட காலத்துக்குப் பிறகு, எல்லா ஜாதியினருக்கும் பயன்படும் படியாகப் பொருளாதார ரீதியில் தாழ்ந்திருப் பவர்களுக்கு இட ஒதுக்கீடு செய்ய வேண் டுமே தவிர, ஜாதி அடிப்படையில் ஒதுக்கீடு என்பது பைத்தியக்காரத்தனம் என்றுதான் சொல்ல வேண்டும். ஜாதியடிப்படையில் ஒதுக்கீடு என்றால் அவரவரும் தங்கள் ஜாதிக் கான ஒதுக்கீடு அதிகரிக்கத் தங்கள் மக்கள் தொகையை அதிகரிக்கச் செய்யவே எண்ணு வார்கள். அதனால் குடும்பநலத் திட்டமே பயனற்றுப் போய்விடும். மேலும் உயர்ந்த ஜாதியைச் சேர்ந்தவன் என்பதாலேயே ஒருவ னின் புத்திசாலித்தனம் புறக்கணிக்கப்படும் நிலை இருக்குமானால் எதிர்காலச் சமூகத்தில் மூளை வறட்சி (Brain drain) ஏற்படும் அ பா யம் இருக்கிறதென்பதையும் நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

**மணிவர்மா (வன்னியர் சங்கம்):**

இட ஒதுக்கீட்டுக்காக வன்னியர் போராட்டம் நடப்பதற்கு முன்பு நான் 'எல்லா ஜாதிச் சங்கங்களையும் கலந்தாலோசித்து விட்டு, வன்னியருக்கென்று தனி ஒதுக்கீடு கேட்காமல், மக்கள் தொகை அடிப்படை யில் பல்வேறு ஜாதிகளுக்கும் இட ஒதுக்கீடு கேட்போம்' என்று கூறினேன். அதை ஏற் காமல், வன்னியர் போராட்டத்திற்குத் தலைமை தாங்கியவர் தம்மை ஒரு ஹீரோவாக் கிக் கொள்ளும் போக்கினைக் கடைப்பிடித்த தால் போராட்டமே திசை மாறி, ஹரிஜனங் களுடன் மோதல், பொதுச் சொத்து நாசம் போன்ற வேண்டாத விளைவுகளை ஏற்படுத்தி விட்டது. மேலும் போராடிய வன்னியர் சங் கத்தை மட்டுமே முதல்வர் எம். ஜி. ஆர். அழைத்துப் பேசாமல், எல்லா ஜாதிச் சங்கத் தினரையும் அழைத்துப் பேசியிருக்கிறார்! இனி 'ஜாதி அடிப்படையில் இட ஒதுக்கீடு சாத்தியமில்லை' என்று அவர் சொன்னாலும் நாங்கள் ஏதும் செய்ய முடியாது. மறுபடியும் போராட்டம் என்றால் இருக்கிற பெயரும் கெட்டுத்தான் போகும்.

**ராமச்சந்திர நாடார் (தலைவர், நெல்லை நாடார் மகமை பரிபாலன சங்கம்):**

மறவர், வன்னியர் சமூகங்களைப் போலவே தமிழகத்தில் பெருத்த ஜனத் தொகை கொண்டது நாடார் சமூகம். எனினும், ஜனத்தொகைக்கேற்ப நாடார் சமூகத்திலிருந்து உயர் பதவிகளை யாரும் வகிக்கவில்லை. பொருளாதாரத்திலும் கல்வி யிலும் பின்தங்கியுள்ள நாடார் சமூகத்து மாணவர்களால் முற்பட்ட இனத்தவரோடு போட்டி போட்டு வெற்றி பெற முடிய வில்லை. இருந்தும் நாடார் சமூகத்திற்கென்று தனிப்பட்ட ஒதுக்கீடு தேவை என்று நாங்கள் போராடப் போவதில்லை என்றாலும் அர சாங்கமே தனி இட ஒதுக்கீடு செய்து கொடுத் தால் மகிழ்ச்சியுடன் வரவேற்போம். இதற்கு முன் ஜாதிவாரியான ஜனத்தொகையை அரசாங்கம் சரியான முறையில் கணக் கெடுத்துக் கொள்ள வேண்டும்.

பேட்டி: **எஸ். சந்திரமௌலி.**

படங்கள்: **கே. வி. ஆனந்த்.**

---

## பாயசத்தின் ருசியா; கோப்பையின் அழகா?



ராஜாஜி எழுதிய ''வியாசர் விருந்து'' புத்தக வெளியீட்டு விழா நடந்தபோது, பல அறிஞர்கள் ராஜாஜி எழுதிய வியாசர் விருந்து புத்தகத்தைக் குறித்து வெகுவாகப் புகழ்ந்து பேசினார் கள். எல்லோரும் பேசி முடிந்த பிறகு ராஜாஜி பேச எழுந்திருந்தார். ''வியாசர் எழுதிய மூல கிரந்தத்திலிருந்து சில முக் கியமான அம்சங்களைத் தொகுத்து ''வியாசர் விருந்து'' புத்தகமாக வெளியிட்ட எனக்கு இவ்வளவு புகழ்ச்சி எதற்காக? இந்தப் புகழ்ச்சியெல்லாம் வியாச பகவானுக்குத்தான் உரித்தாக வேண்டுமேயல்லாது எ ன க் க ல் ல'' வென்று கூறிய ராஜாஜி மேலும் சொன் னார்: ''கோப்பையில் வியாசர் விருந்து பாயசத்தை நிரப்பி உங்களுக்குக் கொடுத் தேன். பாயசத்தின் ருசியைக் குறித்துப் பேச வேண்டிய நேரத்தில் பாயசத்தைத் தாங்கி நிற்கும் கோப்பையின் அழகைக் குறித்து வர்ணிப்பது எந்த விதத்தில் நியாயமாகும்?'' — அமரர் ராஜாஜி யின் அடக்கம் இமயமலைச் சிகரம் போல் பிரகாசித்தது.

— கே. எஸ். பரமேசுவரன்



ரகுபதி

தண்டபாணி — லாலம்மா தம்பதி.

# "எங்களுக்கு வேண்டாம் இட ஒதுக்கீடு..."

"நீங்கள் எம். ஜி. ஆரைச் சந்தித்த போது, உங்கள் ஜாதியினருக்கு எத்தனை சதவிகித இட ஒதுக்கீடு வேண்டும் என்று கேட்டீர்கள்?" என்று நரிக்குறவர் இனத்தைச் சேர்ந்த தண்டபாணி — லாலம்மா தம்பதியைக் கேட்டபோது, கலகலவென்று சிரிக்க ஆரம்பித்து விட்டார் தண்டபாணி.

"அதெல்லாம் எங்களுக்கு எதுக்கு சாமி? நாங்க படிச்சா இருக்கிறோம் வேலை கேட்கிறதுக்கு? எங்களுக்குக் குந்தவே சொந்தமா ஒரு தெழுலு இல்லை சாமி. மரத்தடிங்கள்லதான் குடும்பமே நடத்தறோம். எனக்கு ஆறு பொண்ணுங்க. மூணு பசங்க. எல்லாமே மரத்தடிலதான் வாழ்றோம். வெய்யல்ல காயறோம்; மழைல நனையறோம். மொதல்ல இந்தச் சர்க்காரு எங்களுக்கு வூடு கட்டிக் குடுக்கணும் சாமி. இந்த இட ஒதுக்கீடுங்கள்லாம் எங்களுக்கு எதுக்கு? அதெல்லாம் உங்களை மாதிரி படிச்சவங்களுக்குத்தான். வூடுதான் வேணும். அதைத்தான் புரட்சித் தலைவர்கிட்டே சொன்னோம்..." என்றார் தண்டபாணி.

உண்மையில் நரிக்குறவர் இனத்தில் படித்தவர்களே கிடையாதா? — இந்தக் கேள்வியை, வீர சைவலிங்காயத்இனத்தில்பிறந்து.



''அந்த எம். எல். ஏ. மட்டும் எந்தக் கருத்தையும் துணிஞ்சு பேசிடுவாரு.''

''அப்படியா?''

''ஆமாம். ஆனால் பேச்சு முடிவில 'இது என் தலைவனின் கருத்தல்ல, என் கட்சியின் கருத்தல்ல, என் சொந்தக் கருத்துமல்லன்னு சொல்லிடுவாரு.''

— சேத்தூர் அன்பழகன்.



''என்னைத் திட்டினீங்களாமே... ஏன்?''

''உங்களைப் பாராட்ட வார்த்தை கிடைக்கலே சார்!''

— கடுவை கோபால்சாமி.



நடிகை: ''அடிக்கடி மந்திரிசபையிலேருந்து மந்திரிங்களை டைவர்ஸ் பண்றாங்களே, ஏன்...?''

பி. ஏ.: ''அதை டைவர்ஸ்னு சொல்லக் கூடாது; டிஸ்மிஸ்னு சொல்லணும் மேடம்!''

— கடுவை கோபால்சாமி.

நரிக்குறவர் இனத்தை முன்னேற்றுவதற்காகத் தாமே ஒரு நரிக்குறவப் பெண்ணை மணந்து, தமது தங்கையையும் அந்த இன இளைஞருக்கே மணம் முடித்துக் கொடுத்த ரகுபதியிடம் கேட்டோம்.

''தமிழ்நாடு முழுவதிலும் உள்ள சுமார் நாற்பதாயிரம் நரிக்குறவர்களில் ஓர் ஐம்பது பேர்தான் படித்திருக்கிறார்கள். அதுவும் எட்டாவதிலிருந்து, பிளஸ் டூ வரைக்கும்தான். இப்போதுதான் இரண்டு மூன்று பேர் கல்லூரிப் படிப்புக்குச் சென்றிருக்கிறார்கள். இந்நிலையில் எங்களுக்கென்ன இட ஒதுக்கீடு வேண்டிக் கிடக்கிறது? இந்த ஐம்பது பேருக்கும் பியூன் வேலையாவது கொடுங்கள் என்பதுதான் எங்கள் கோரிக்கை.

''மேலும் வீடு வாசல் இன்றி நாடோடிகளாகத் திரிந்து வாழ்க்கை நடத்தும் இவர்களை அரசு இன்னும் பிற்படுத்தப்பட்டவர்கள் (**Backward Class**) என்று சொல்வதுதான் வேடிக்கை! இது அநியாயம். எனவே, ஆதிவாசிகள் பட்டியலில் சேருங்கள் என்கிறோம். இன்னும் சொல்லப் போனால் நரிக்குறவ இனத்தவர் தமிழ் பேசினாலும் தாய்மொழி தமிழல்ல; 'வாகிரிபோளி' என்பதுதான் தாய்மொழி. எனவே, மொழிவாரிச் சிறுபான்மை இனத்திலும் சேர்க்க வேண்டும் என்கிறோம்.

''இன்னும் ஒரு பெரிய குறையும் எங்களுக்கு உண்டு. கடந்த 72-இல் நரிக்குறவர் இனச் சிறுவர்களின் முன்னேற்றத்திற்காக நான் சைதாப்பேட்டை ஆசிரியர் கல்லூரி வளாகத்திற்குள் அமைத்த ஹாஸ்டலுக்கும், பள்ளிக்கூடத்திற்குமான இடம் இன்னும் அரசால் சொந்தமாக்கித் தரப்படாதது மட்டுமல்ல; சொந்தமாக்கித் தரமாட்டோம் என்று நீதிமன்றத்தில் வழக்கும் தொடுத்திருக்கிறது!

''மேலும் ஒரு குழந்தைக்குத் தாயோ அல்லது தந்தையோ இல்லாத போது, அக்குழந்தையைத் திக்கற்றோர் இல்லத்தில் சேர்த்தால் அந்தக் குழந்தைக்கு அரசாங்கம் மாதா மாதம் நூற்றைம்பது ரூபாயை உதவித் தொகையாகவழங்குகிறது. ஆனால், நாடோடிகளாகத் திரியும் நரிக்குறவர்களின் குழந்தைகள் ஹாஸ்டலில் தங்கிப் படிக்கும்போது, வெறும் நாற்பத்தைந்து ரூபாய்தான் உதவித் தொகையாக வழங்கப்படுகிறது. இதுவும் என்ன நியாயம் என்று எங்களுக்குப் புரியவில்லை!''

இவ்வாறு கூறிய ரகுபதி, சைதாப்பேட்டையிலுள்ள நரிக்குறவர் குழந்தைகள் ஹாஸ்டலுக்கு அழைத்துச் சென்று, அங்கே தங்கிப் படிக்கும் மாணவ, மாணவியர்களை அறிமுகப்படுத்தி வைத்தார். இடுப்பில் கோவணமும் கழுத்தில் பாசிமணி மாலைகளும் உடம்பு முழுவதும் குத்திய பல்வேறு டிசைன் பச்சைகளுமாய்த் திரியும் நரிக்குறவர்களுடைய குழந்தைகளா அவர்கள்? பிரமித்துப் போனோம்! உண்மையில், மனிதர்களை உருவாக்குவது, வளரும் சூழ்நிலையும் வசதியும் வாய்ப்பும் கல்வியும்தானே தவிர, பிறப்பு அல்ல என்பதை நிதர்சனமாகக் கண்டோம்.

— பிரின்ஸ்

அட்டையில்: தண்டபாணி — லாலம்மா தம்பதி. வண்ணப்படம்:

கே. வி. ஆனந்த்



# "அப்பன் வெட்டிய கிணறு என்று உப்புத் தண்ணீரையா குடிப்பது?"

— டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி

இட ஒதுக்கீடு என்பது அமெரிக்காவில் கூட இருக்கிறது. அமெரிக்க இந்தியர்கள் (சிவப்பிந்தியர்கள்) என்று சொல்லப்படும் மக்களின் பின் தங்கிய நிலையை மாற்றுவதற்காக அங்கும் ஒரு குறிப்பிட்ட சதவிகித இட ஒதுக்கீடுகள் உண்டு. எனவே, பின் தங்கிய நிலையில் இருப்பவர்கள் முன்னேறுவதற்கான வழிவகைகளை ஏற்படுத்தித் தர வேண்டியது முன்னேறியவர்களின் கடமை என்பதில் சந்தேகமேயில்லை. அந்த வகையில் இட ஒதுக்கீடு என்பது அவசியம் தேவை.

எனினும் அந்த இட ஒதுக்கீடு எந்த அடிப்படையில் இருக்க வேண்டும் என்பதுதான் இன்றைய பிரச்னை. நிச்சயம் அது ஜாதி அடிப்படையில் இருக்கக் கூடாது. அப்படியிருந்தால் மேலும் மேலும் ஜாதி உணர்வுகளை வளர்த்துக் கொண்டே போகிற நிலைதான் நீடிக்கும். அதோடு, ஒவ்வொரு ஜாதியிலும் முன்னேறியவர்களே திரும்பத் திரும்ப அந்தச் சலுகைகளை அனுபவிப்பார்கள். அதனால் அந்தச் சலுகைகள் நியாயமாகப் போய்ச் சேர வேண்டியவர்களுக்கு — இன்னமும் முன்னேறாதவர்களுக்குப் போய்ச் சேராத அபாயமும் அதில் இருக்கிறது. இந்த உண்மையைத்தான் கிராமப்புற மக்களின் பொருளாதாரம்— வாழ்க்கை பற்றிச் சி.டி. குரியன் எழுதிய புத்தகம் உறுதிப்படுத்துகிறது.

எனவே, இந்த ஜாதி ரீதியான ஒதுக்கீடுகளையெல்லாம் தூக்கியெறிந்து விட்டுப் பொருளாதார ரீதியாகப் பின் தங்கியவர்கள், சமூக ரீதியாகப் பின் தங்கியவர்கள், கல்வியில் பின் தங்கியவர்கள் என்று ஒட்டு மொத்தமாகப் பின் தங்கிய அனைவரையும் மூன்று பிரிவுகளாகப் பிரித்துச் சலுகைகள் வழங்கலாம். இந்தச் சலுகைகளும் கல்வி நிலையங்களில்தான் வழங்கப்பட வேண்டுமே தவிர, வேலைவாய்ப்பிடங்களிலோ, பதவி உயர்வு விஷயங்களிலோ வழங்கப்படக் கூடாது.

நிச்சயமாக வேலை என்பது திறமையின் அடிப்படையில் பெற்றதாக இருக்க வேண்டுமே தவிர, சலுகையின் அடிப்படையில் பெற்றதாக இருக்கக் கூடாது. இந்த மனோபாவத்தை நாம் முதலில் வளர்த்தாக வேண்டும்.

கல்வி நிலையங்களில் பின் தங்கியுள்ள மாணவர்களைச் சேர்த்துக் கொள்ளும் போது, அவர்கள் முன்னேறிய மாணவர்களோடு போட்டி போடுவதற்கு வசதியாக, அவர்களுக்குச் சிறப்பு வகுப்புகள் நடத்தப்பட வேண்டும். 'அவர்களுக்குக் கிடைக்கிற அதே கல்விதான் உங்களுக்கும் கிடைக்கிறது. எனவே, இனியும் நீங்கள் சலுகைகளை எதிர்பார்க்காமல், திறமைகளை வளர்த்துக் கொண்டுதான் முன்னேற வேண்டும். உங்களால் அது முடியும்' என்கிற மனோபலத்தை வழங்க வேண்டும்.

கோவையிலுள்ள என் நண்பர் ஒருவர் அடிக்கடி ஓர் உதாரணம் சொல்லுவார். 'நீ தேங்காய் பறிப்பதற்காக உன்னோடு நான் தென்னை மரத்தின் உச்சி வரை வந்து ஏற்றி விட முடியாது. என் உயரத்திற்குத்தான் ஏற்றி விட முடியும். அதற்கு மேல் நீதான் மேலே ஏறிச் சென்று தேங்காய் பறித்துக் கொள்ள வேண்டும்' என்பார். அதுபோல் கல்வி நிலையங்களில்தான் பின் தங்கியவர்களுக்குச் சலுகைகள் காட்டப்பட வேண்டுமே தவிர, அது பதவி உயர்வு வரை செல்லக் கூடாது. அது சுய முயற்சி என்பதையே மழுங்கச் செய்யும் ஒரு செயலாகத்தான் இருக்க முடியுமேயொழிய, திறமையாளர்களை உருவாக்குகிற செயலாக இருக்காது.

உண்மையிலேயே பின் தங்கியிருக்கிற மக்கள் முன்னேற வேண்டுமானால், 'அப்பன் வெட்டிய கிணறு என்று மூடர்கள் உப்புத் தண்ணீரையே குடிக்கின்றார்' என்று பாரதி சொன்னது போல், எப்படியோ வந்து விட்டது என்பதற்காக இன்னமும் ஜாதி ரீதியாகப் பின் தங்கியவர்களைக் கணக்கிடும் நிலையைக் கட்டிக் கொண்டு அழாமல் தூக்கியெறிந்து விட்டுப் பொருளாதார— சமூக— கல்வி ரீதியாகப் பின் தங்கியவர்களைப் பிரித்துச் சலுகைகள் வழங்குவதுதான் நியாயமானது. இந்த விதத்தில் பொருளாதாரத்தில் பிற்படுத்தப்பட்டவர்களுக்குச் சலுகைகள்— இட ஒதுக்கீடு என்று முன்பு எம். ஜி. ஆர். கொண்டு வந்த திட்டம் பாராட்டப்பட வேண்டியது. ஆனால் ஒரு சிலரின் அர்த்தமற்ற வாதங்களைப் பார்த்து அவர் பயந்து போய்த் திட்டத்தையே கைவிட்டதுதான் வருத்தத்திற்குரிய விஷயம்.






# பிரமிக்க வைத்த ருஷ்யக் கலைஞர்கள்!

அன்னங்களைப் போல் நடந்தார்கள். மான்களைப் போல் துள்ளினார்கள். பம்பரங்களாகச் சுழன்றார்கள். விடுபட்ட ஸ்ப்ரிங்குகளைப் போல் குதித்தார்கள். அனாயாசமாய் நான்கடி உயரம் வரை எழும்பி, அந்தரத்திலேயே ஒரு சுற்றுச் சுற்றி, அதிராமல் பூமிக்குத் திரும்பினார்கள் — இவ்வளவும் தாளகதி பிசகாமல், இசைக்கு ஏற்பச் செய்யப்பட்டன. தம்மை மறந்து இப்படி நடனமாடியவர்களுக்குத் துளியாவது மூச்சு வாங்க வேண்டுமே? ம்ம்ஹூம்...! பார்த்துக் கொண்டிருந்த நமக்குத்தான் மூச்சிரைக்கும் போலிருந்தது!

இந்தியாவில் நடைபெற்றுக் கொண்டிருக்கும் ருஷ்யக் கலைவிழாவையொட்டி, சென்னை மியூசிக் அகாடமியில் நடைபெற்ற கிராமிய நடன நிகழ்ச்சிதான் இப்படி நம்மை வியக்கச் செய்தது. இயக்குனர் ஈகர் முயிஸெய்வ் தயாரிப்பில் ருஷ்யக் கலைஞர்கள் வழங்கிய அந்நிகழ்ச்சி, ருஷ்யக் கலை மற்றும் கலாசாரத்தைப் பற்றிய ஒரு கண்ணோட்டத்தை நமக்கு வழங்கியதோடு, அந்நாட்டுக் கலைஞர்களின் அபரிமிதமான உழைப்புக்கும் திறமைக்கும் ஓர் அற்புதச் சான்றாகத் திகழ்ந்தது.

பிரும்மாண்டமான நாடான ருஷ்யாவின் பல்வேறு மாநிலங்களிலிருந்தும் அந்தந்தப் பிரதேசத்துக்குரிய பிரத்தியேகக் கிராமிய நடனங்களைத் தேர்ந்தெடுத்து, வயல்வெளிகளிலும் வீதிகளிலும் வழங்கிவரும் அவற்றை, மேடையில் வழங்குவதற்கு ஏற்றபடி வடிவமைத்திருக்கிறார், இயக்குனர். கிராமிய மணத்தையும் கலைநயத்தையும் குலைக்காமல் ஓர் இயந்திரக் கச்சிதத்தையும் புகுத்தியிருக்கிறார். ஏராளமான கலைஞர்களை உள்ளடக்கிய மாபெரும் குழு அது. இங்குள்ள மிகப் பெரிய அரங்கமோ ருஷ்ய நோக்கில் மிகச் சிறியது. அவ்வாறிருந்தும் இம்மியளவும் கச்சிதம் குறையாமல் நிகழ்ச்சியை வழங்கியது பெரிய சாதனை.

இத்தனைக்கும், அன்றைய நிகழ்ச்சியில் அநேகமாக எல்லா நடனங்களிலும் காதலர்கள் சந்திப்புத்தான் காட்டப்பட்டது. ஓரிரு போர்க்கால நடனங்கள் இடம்பெற்றன. ஆனால் கதையம்சம், உணர்ச்சிகள், பாவம் என்று பெரிதாக எதுவும் கிடையாது. இருப்பினும் இந்நிகழ்ச்சி துளியும் தொய்வில்லாமல் இரண்டு மணி நேரத்துக்குப் பார்வையாளர்களைக் கட்டிப் போட்டது. இதற்குக் காரணம் நிகழ்ச்சி நமக்கு முன்பின் அறிமுகமாகாத ஒரு புதுமை என்பது மட்டுமல்ல; ஒவ்வொரு கலைஞரும் தமது முழுத் திறமையையும் உழைப்பையும் வெளிப்படுத்தியமைதான். பத்துப் பதினைந்து பேர் ஒரே சமயத்தில் ஆடிய போதிலும் பிசிறு தட்டாமல் அமைந்திருந்த அவர்களுடைய ஒரே சீரான அசைவுகள்தான்.

இசை இன்றி நடனம் இல்லை என்பதால் இசைக் குழுவினருக்கு அவர்கள் மிகுந்த மதிப்பளித்தார்கள். அதேபோல் நடனக் கலைஞர்களின் உடைகளுக்கும் ஒப்பனைக்கும் முக்கியத்துவம் தரப்பட்டிருந்தது. ஆடை ஆபரணங்களில் எளிமையும் வண்ணமும் வனப்பும் இழைந்திருந்தன. அவற்றை அணிந்திருந்த கலைஞர்கள் ஒவ்வொருவரது உடற்கட்டும் அளவாகவும் அழகாகவும் பாதுகாக்கப்பட்டிருந்தது மற்றும் ஒரு விசேஷம்.

நிகழ்ச்சியின் முடிவில் தமிழக முதல்வர் சார்பில் ருஷ்யக் கலைஞர்களுக்கு நன்றி கூறுவதிலும் அவர்களுக்கு மாலைகள் அணிவித்து நினைவுப் பரிசுகள் வழங்குவதிலும் ஏற்பட்ட குழப்பங்கள், ருஷ்யக் கலைஞர்களின் கச்சிதமான ஒழுங்குக்கு நேர்மாறாக விளங்கி, நம்மை வெட்கப்பட வைத்தன. அதுதான் போகட்டுமென்றால், தமிழகத்தில், முதல்வர் சார்பில் முதலில் தமிழில் பேசி, பிறகு அதனை ருஷ்ய மொழியில் மொழி பெயர்க்கச் செய்வதுதான் முறை என்பது கூடவா பத்மா சுப்பிரமணியத்துக்குத் தெரியாமல் போகும்? தாம் முதலில் ருஷ்ய மொழியில் பேசிப் பிறகு அதனை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கச் செய்தது எவ்வாறு சரியாகும்?

— நமது நிருபர்

# "தேவைக்கேற்ப வீட்டு சாதனங்களை சுலபமாக வாங்க அருமையான திட்டம்"




# கன்ஸ்யூமர் ரெக்கரிங் டேப்பாசிட் திட்டம்

• உங்கள் வீட்டுக்குத் தேவையான டிவி, பிரிட்ஜ், மிக்சி, வெட் கிரைண்டர், கேஸ் அடுப்புகள், டேப் ரெக்கார்டர், சைக்கிள், மினி கம்ப்யூட்டர், மொபெட் வண்டிகள் மற்றும் பட்டுப் புடவைகள் பெற்றிட இதோ ஒரு சுலபமான வழி.

• மூன்று வருட சேமிப்பு திட்டக் கணக்கு ஆரம்பியுங்கள். முதலாண்டு முடிவிலேயே உங்கள் தேவைக்கான மேற்கண்ட பொருட்களை வாங்க வசதியளிக்கிறோம்.

• தவணைத் தொகைக்கு 30 மடங்கு கடனாக அளிக்கிறோம்.

• சேமிப்புத் திட்ட கணக்கில் மட்டும் தவறாமல் மாதா மாதம் 3 வருடம் கட்டவேண்டும். திட்ட முடிவில் 3 மாத போனஸும் ½% வட்டி கழிவும் கொடுக்கப்படும்

• இந்த சேமிப்பின் மூலம் உங்கள் மனதிலுள்ள ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ள சிறந்த சந்தர்ப்பம்.

• சேமிப்புக் கணக்கை ரூ.10-லிருந்து 350/- வரை முடிந்த அளவு சேமிப்பு தொகையாக கட்டி ஆரம்பிக்கலாம்.

**இந்த 84 வருடங்களில் - வளர்நிதி, நிரந்திர வைப்புநிதி, ரெக்கரிங் டெபாசிட், நடப்புக் கணக்கு, தினசரி சேமிப்பு, சேவிங்ஸ் மற்றும் கலவ சேமிப்பு உள்ளிட்ட பல்வேறு நலத்திட்டங்கள், எம்மிடம் உள்ளன.**

## பாங்க் ஆ·ப் தமிழ்நாடு லிட்.

**A Licensed Scheduled Commercial Bank**

(பதிவு அலுவலகம் : 62, கீழரத வீதி, திருநெல்வேலி-627 006

**Chairman – R.A. Nilakantan**



# பிடிவாதக்காரர் நா.பா.!

**நா**. பா. ஒரு பிடிவாதக்காரர். அவருடைய பலமும் அதுதான்; பலவீனமும் அதுதான்! அவருடைய கதைகளின் கதாபாத்திரங்களைப் பாருங்கள்; கதாநாயகன் கடைசி வரை பிடிவாதத்துடன் நல்லவனாகவே இருப்பான். வில்லன் பிடிவாதமாக இறுதிவரை வில்லத்தனம் செய்வான். காதலர்களோ என்ன கஷ்டம் வந்தாலும் விடாப்பிடியாக ஒருவிதப் பிடிவாதத்துடன் காதலிப்பார்கள்!

எழுத்தில் மட்டுமின்றி வாழ்க்கையிலும் நா. பா. ஒரு பிடிவாதக்காரர். எழுத்துலகில் அடியெடுத்து வைத்த பிறகு மீண்டும் பள்ளியிலோ கல்லூரியிலோ தமிழ்ப் பண்டிதராகச் சேர்வதில்லை என்றும் எழுத்தாளராகவே கடைசி வரை வாழ்ந்து காட்டுவது என்றும் பிடிவாதமாக இருந்து வெற்றி பெற்றார். கல்கி ஆசிரியர் சதாசிவம் மதுரைக்கு ஒரு முறை சென்றிருந்தபோது அவரைச் சந்தித்துப் பேசினார் நா. பா. கல்கியில் புதிய தலைமுறைக் (அந்நாளைய) கதாசிரியர்கள் எழுதுவதில்லை என்ற குறையை எடுத்துக் காட்டினார். நா. பா. வின் பேச்சு சதாசிவத்தைக் கவர்ந்தது. "நீங்களே அதற்கு ஏற்பாடு செய்யுங்கள்; சென்னைக்கே வந்து விடுங்கள்" என்றார். கல்கியில் உதவி ஆசிரியராகச் சேர்ந்தார் நா. பா. குறிஞ்சி மலர் அவருக்குப் பெரும் புகழும் பெற்றுத் தந்தது என்றால் பொன் விலங்கும் பாண்டி மாதேவியும் அவற்றை மேலும் வளர்த்தன.

அவருடைய தொடர் கதைக்கு ஒவ்வோர் இதழிலும் ஆறு பக்கம் ஒதுக்கப்பட்டிருக்கும். ஆறு வரி அதிகமாக எழுதியிருப்பார். அதை அடித்துக் குறைத்து விடுங்கள் என்றால், "ஏன், இந்த ஆறு வரிகளை மட்டும் தனியே அச்சடித்துப் பக்கத்தின் விளிம்பில் ஒட்டி உள்ளடங்க மடித்துவிட்டு விடலாமே" என்பார்! தமது எழுத்தில் அவ்வளவு பற்றுதல், அதன் தரத்தில் அவ்வளவு நம்பிக்கை, அதனைச் சிதைக்க அனுமதிக்கக் கூடாது என்பதில் அத்தனை பிடிவாதம்!

**ஒ**ரு சமயம் அவர் கதையின் இடையே இருந்த ஒரு வர்ணனையை நீக்கி விட்டேன். அப்போது அவர் ஊரில் இல்லை. அதனால் நானே பொறுப்பேற்றுச் செய்து விட்டேன். அது ஆபாச வர்ணனையல்ல; ஆனால் அருவருப்பாக இருந்தது. கல்கியில் இடம் பெறக் கூடாத வர்ணனையாக எனக்குத் தோன்றியது. ஊரிலிருந்து திரும்பிய நா. பா. வுக்கு ஒரே கோபம். விஷயம், ஆசிரியர் சதாசிவத்தின் கவனத்துக்குப் போயிற்று. அவர் என் கருத்தை ஆமோதித்தார். ஆனால் நா. பா. இந்தத் தீர்ப்பை மனமொப்பி ஏற்றுக் கொள்ளவேயில்லை! அடுத்தாற்போல் அவருடைய சிறுகதை ஒன்று கல்கிக்கு ஏற்றதாக இல்லை என்பதாகக் கருதப்பட்ட போது அதனை வேறு ஒரு பத்திரிகையில் பிரசுரிக்க அனுப்பிவிட்டு, கல்கி காரியாலயத்திலிருந்து விலகிக் கொண்டார். பத்திரிகைக்கென்று சில கொள்கைகள் இருக்கும். அதற்கு உட்பட்டுத்தான் அதில் பணியாற்றுவோர் நடந்து கொள்ள வேண்டும் என்ற நிர்ப்பந்தத்துக்கு, அவரால் ஈடுகொடுக்க முடியவில்லை.

'தீபம்' என்ற பெயரில் சொந்தப் பத்திரிகையை ஆரம்பித்து விட்டார் நா. பா. அதில் கல்கி நிறுவனத்தைச் சாடவும் செய்தார். ஆனால் சீக்கிரமே தாமும் ஒரு பத்திரிகை ஆசிரியர் என்ற முறையில், கல்கி பத்திரிகை ஆசிரியருக்கு இருந்த நிர்ப்பந்தங்களைப் புரிந்து கொள்வது நா. பா. வுக்குச் சாத்தியமாகியிருக்க வேண்டும். அதனால் மீண்டும் வெளியிலிருந்தபடியே கல்கிக்கு எழுத ஆரம்பித்தார். சிறுகதைகள், நாவல்கள் தவிர, 'தீரன்' என்ற பெயரில் தமிழ்நாட்டு அரசியலை அலசினார். சில காலம் அரசியல்வாதியாகவும் இருந்து பார்த்து ஏமாற்றமடைந்து திரும்பினார். இந்திய அரசியலில் தன்மானப் பிடிவாதங்களுக்கு இடமேது?

சாகித்ய அகாதமி பரிசும் சாகித்ய அகாதமி உறுப்பினர் பதவியும், இலக்கியப் பத்திரிகை ஆசிரியரான தீபம் பார்த்தசாரதியை எளிதில் வந்தடைந்தன.

**அ**வருடைய ஆஜானுபாகுவான தோற்றம், நிமிர்ந்த பார்வை, கம்பீர நடை எல்லாமே அவருடைய தன்னம்பிக்கையையும், அதனுடன் இணைந்திருந்த பிடிவாதத்தையும் உணர்த்தும். தமக்கு இதய நோய் வந்திருக்கிறது என்பதையே அவரால் ஒப்புக்கொள்ள முடியவில்லை. இல்லையென்றால் கருணாநிதி கூப்பிட்டார் என்பதற்காக மலேசியா தமிழ் மாநாட்டுக்குப் போயிருப்பாரா? திரும்பி வந்து நர்ஸிங் ஹோமில் சேர்ந்தவர், ஓய்வு தேவை என்று டாக்டர் எவ்வளவோ வற்புறுத்தியும், 'எனக்கு உடம்புக்கு ஒன்றுமில்லை' என்று வீடு திரும்பியிருப்பாரா? இந்தப் பிடிவாதமே அவருடைய முடிவைத் துரிதப்படுத்தி விட்டது.

கல்கியில் பிரசுரமான 'வலம்புரிச் சங்கு' என்ற பரிசுக் கதை மூலமாக எழுத்துலகில் அடியெடுத்து வைத்த நா. பா., இலக்கியத் தரத்தில் பிடிவாதம் காட்டிய அபூர்வமான வலம்புரிச் சங்காகவே கடைசி வரை திகழ்ந்தார்.

— கி. ராஜேந்திரன்

தெ. ஆ. மாவட்ட ரீ – விசிட்:

# அதிகாரிகள் மாறுகிறார்கள்; பிரச்னைகள் மாறவில்லை!



• தந்தை சின்னச்சாமியுடன் மாணிக்கம்: அதே நிலைதான்.

சென்ற வருடம் செப்டம்பர் மாதத்தில் 14, 21 தேதி 'கல்கி' இதழ்களில் தென்னாற்காடு மாவட்டப் பிரச்னைகள் பற்றிய பல கட்டுரைகளையும், 28-ந் தேதி இதழில் அப்போதைய மாவட்ட கலெக்டர் ஆர். சி. பண்டாவின் பேட்டியையும் வெளியிட்டிருந்தோம்.

சுமார் ஒண்ணேகால் வருடம் கழித்து இந்த நவம்பரில் தெ. ஆ. மாவட்டப் பிரச்னைப் பகுதிகளை 'ரீ – விசிட்' செய்தோம். தவிர, பல பகுதிகளில் ஏதாவது தீர்வு நடந்ததா இல்லையா என்பது பற்றிக் 'கல்கி'யின் சமுதாயப் பணியில் ஆர்வத்துடன் ஒத்துழைக்கும் வாசகர்களின் 'ரீ – விசிட்' ரிப்போர்ட்டுகளும் வந்தன.

பல பிரச்னைகளுக்கு இன்னும் தீர்வு காணப்படாத நிலைமை வேதனை தருவதாக இருக்கிறது. கலெக்டர் பண்டா மாற்றலாகிப் போய், இப்போது தங்கவேலு கலெக்டராகி விட்டார். மாவட்ட மக்கள் தொடர்பு அதிகாரியாக கிருஷ்ணன் அப்போதிருந்தார். அவர் இடத்தில் இப்போது ராமநாதன் பணியாற்றுகிறார். அதிகாரிகள் மாற்றம் நடந்திருக்கிறதே தவிர பிரச்னைகளின் நிலைமையில் மாற்றம் நடைபெறவில்லை.

'கல்கி' இதழ்களில் சுட்டிக் காட்டிய பல்வேறு பிரச்னைகளில் தீர்வு காணப்பட்டவற்றின் பட்டியலை (சிறிதானதால்) முதலில் பார்க்கலாம்.

•• விருத்தாசலம் நகரில் சார்பு மற்றும் உரிமையியல் நீதிமன்றங்கள் சொந்தக் கட்டடம் இல்லாமல் குறுகிய இடத்தில் இருந்தது பற்றி எழுதினோம். பிறகு இதே பிரச்னைக்காக 1987 ஏப்ரலில் வழக்கறிஞர்கள் ஒரு நாள் மறியல் நடத்தினார்கள். அவர்கள் கைதானதைக் கண்டித்து மாவட்டம் முழுவதும் வழக்கறிஞர்கள் ஒருநாள் நீதிமன்றப் பணிகளைப் புறக்கணித்தார்கள். பத்து நாட்களுக்குத் தொடர் உண்ணாவிரதப் போராட்டமும் நடந்தது. இத்தனைக்கும் பிறகு அரசாங்கம் நீதிமன்றத்துக்குச் சொந்தக் கட்டடம் கட்ட உத்தரவு போட்டு, நிதியும் ஒதுக்கியுள்ளது. கட்டட வேலைகள் ஆரம்பமாகி விட்டன!



• கொடிகளம் கிராமம்: பணம் திருப்பித் தரப்பட்டு விட்டது.

•• திட்டக்குடி தாலுகாவில் உள்ள கொடிகளம் கிராமத்தின் அரிஜனக் காலனி மக்களிடம் தீயணைப்புப் படையினர் குடிசை எரிந்தது பற்றிச் சான்றிதழ் தருவதற்கு வற்புறுத்திப் பணம் வாங்கியதைப் பற்றி வெளியிட்டிருந்தோம். மாநில தீயணைப்பு இயக்குனர் ராஜகோபால் பணத்தைத் திருப்பித்தர உத்தரவிட்டிருப்பதாகத் தெரிவித்திருந்தார். விசாரித்ததில் பணம் திருப்பித் தரப்பட்டதாகத் தெரிய வந்தது! பாராட்டுக்கள்.

இதைத் தவிர வேறு எந்தப் பிரச்னையும் தீர்க்கப்பட்டதாக நமது 'ரீ – விசிட்'டில் தெரியவரவில்லை! மாறாகப் பிரச்னைகள் தொடர்கின்றன. மேலும் பல பிரச்னைகள் உருவாகியும் இருக்கின்றன.

•• பண்ருட்டிக்குப் பதின்மூன்று கிலோமீட்டர் தொலைவிலுள்ள கிழக்கு மருதூரில் மேல்நிலை நீர்த் தொட்டி ஒழுகிக் கொண்டே இருப்பதாகவும் ஏறத்தாழ ஒரு மினி குற்றாலம் போல அதிலிருந்து நீர் பொழிவதாகவும் சுட்டிக்காட்டியிருந்தோம். பதினைந்து மாதங்க



• அழகிய பிச்சாவரம்: அலங்கோல நிலையேதான்.



• ஷீலா தேவி...



• ...சுமதி: பிரச்னை தீரவில்லை.



• கிழக்கு மருதூர் மேல்நிலைத் தொட்டி: இன்னும் இதுவொரு மினி குற்றாலம்தான்.

ளுக்குப் பிறகும் அந்தத் தொட்டியின் நிலைமையில் மாற்றமில்லை. தண்ணீர்ப் பஞ்ச காலத்திலும்இப்படி ஓர் அலட்சியம்நீடிக்கிற அராஜகத்தை என்ன சொல்ல?!

•• கல்வராயன் மலையில் வாழும் ஆதிவாசிகள் நிலைமை பற்றிய கட்டுரையில் பார்வையற்ற சிறுவன் மாணிக்கம் பற்றிக் குறிப்பிட்டிருந்தோம். அவனைக் கடலூர் விழியிழந்தோர் பள்ளியில் சேர்க்க உத்தரவிடுவதாக கலெக்டர் பண்டா பேட்டியில் தெரிவித்தார். ஆனால் மாணிக்கம் இன்னமும் கல்வராயன் மலையில் பழைய நிலையிலேயே இருந்து கொண்டிருக்கிறான். லயன்ஸ் கிளப் உதவியுடன் அவனுக்குச் சிகிச்சை தர ஒரு முயற்சி நடந்தது. ஆனால் சிகிச்சையில் பயன் இல்லாத நிலையில் மீண்டும் சொந்த இடத்துக்கே மாணிக்கம் வந்துவிட்டான். மாணிக்கத்தின் நிலைமையில் மட்டுமல்ல, மொத்தமாகவே கல்வராயன் மலையிலுள்ள மக்களின் பிரச்னைகளில் மாற்றம் ஏற்படவில்லை என்று ஹில்டிரைப்ஸ் வெல்ஃபேர் சங்கத் தலைவர் சீனுவாசன் வருத்தத்தோடு தெரிவிக்கிறார்.

•• நெய்வேலியில் இரண்டாவது சுரங்கம் வெட்டுவதற்காகத் தங்கள் கிராமங்களைக் கொடுத்துவிட்டு மாற்றிடத்தில் குடியேற்றப்பட்ட மக்களில் ஒரு பகுதியினர் உளுந்தூர் பேட்டையருகே புதிய அஜீஸ் நகரில் வசித்து வருகிறார்கள். அங்கேயுள்ள மக்களுக்கு வாக்குறுதி தந்தபடி நெய்வேலி சுரங்க நிர்வாகம் வேலைகளும் தரவில்லை, நிலமும் தரவில்லை என்பது பற்றி முன்பு எழுதியிருந்தோம்.

இப்போது சென்றபோது நிலைமையில் அதிக மாற்றமில்லை. ஒரு சிலருக்கு மட்டும் விவசாய நிலம் தர ஏற்பாடாகியிருந்தது. ஆனால் வேலை தரும் விஷயத்தில், துளியும் முன்னேற்றம் இல்லை.

இங்குள்ள தாழ்த்தப்பட்ட வகுப்பு மக்களில் பி. எஸ்ஸி. படித்துத் தேறிய ஷீலா தேவி, ஊனமுற்ற வாலிபரைக் காதலித்துக் கலப்பு மணம் செய்து கொண்ட சுமதி ஆகியோரைப் பற்றி முன்பு எழுதினோம். கலெக்டரிடமும் தெரிவித்தோம். ஆனால் எதுவும் நடக்கவில்லை. இரண்டு பெண்களும் பலமுறை பல அதிகாரிகளைச் சென்று சந்தித்துத் திரும்பியிருக்கிறார்கள். 'உங்களுக்கு வேலை தருவோம் என்று நாங்கள் சொன்னோமா? 'கல்கி' பத்திரிகையில் தானே எழுதினார்கள். அந்தப் பத்திரிகை ஆபீசுக்குப் போய்க் கேளுங்கள்' என்று அகங்காரமான பதிலைப் பல அதிகாரிகளிடம் கேட்டு நொந்த நிலையில் இந்தப் பெண்கள் இருக்கிறார்கள்.

அஜீஸ் நகரில் சுமார் நாற்பது பெண்கள் ஒன்று சேர்ந்து கயிறு திரிப்புப் பணியில் பயிற்சி பெற்றுத் தாமாகவே ஒரு சங்கமும் அமைத்தார்கள். இவர்களுக்கு ஒரு தொழிற்கூடம் ஏற்படுத்த, மாவட்டத் தொழில் மையம் மூலமாகக் கடனுதவி கேட்டு, பயிற்சியாளர்கள் சுப்பிரமணியன் முதலானோர் ஓராண்டு காலமாக அலைந்ததுதான் மிச்சம். தமிழக அரசு நிதி ஒதுக்கத் தயாரான பிறகும் மாவட்டத் தொழில் மையம் நடவடிக்கை எடுக்காததால் ஏதும் நடக்காமல் முயற்சி முடங்கி விட்டது. பயிற்சி வீணாய்ப் போனது.

இதே பகுதியில் உள்ள இளைஞர்களுக்கு வீட்டுக்கு ஒருவர் வீதம் வேலை தருவோம்

என்ற வாக்குறுதியை நெய்வேலி சுரங்க நிர்வாகம் இன்னமும் நிறைவேற்றவில்லை. மாறாக, ''நீங்கள் தொழில் நுணுக்கம் ஏதும் தெரியாதவர்கள். ஏதாவது 'ஸ்கில்' தெரிந்தால்தான் வேலை தர முடியும்'' என்று கூறியிருக்கிறது. முதல் கட்டமாகப் பத்துப் பன்னிரண்டு இளைஞர்களை அருகிலுள்ள ஐ. டி. ஐ. தொழிற்கல்விப் பள்ளியில் குறுகிய காலப் பயிற்சி பெறத் தேர்ந்தெடுத்து அனுப்பியும் இருக்கிறது. இவர்கள் 'ஸ்கில்' தெரிந்து கொண்டு வந்து ஓராண்டு ஆகப் போகிறது. வேலையைப் பற்றித் தகவலே இல்லை. பல முறை நேரில் சென்று இளைஞர்கள் கேட்ட போது, ''அதெல்லாம் மெதுவா வரும். அவசரப்படக்கூடாது'' என்று பதில்தரப்பட்டது. 'ஸ்கில்' தெரிந்த இளைஞர்கள் கிழவர்களாகிக்கைநடுக்கம்ஏற்படுவதற்குள்ளாவது வேலை த ர ப் ப டு ம ா என்று தெரியவில்லை.

அஜீஸ் நகரில் குறை தீர்ந்தவர்கள் யாரென்றால் கடவுள்கள்தாம்! பழைய கிராமத்திலிருந்து கொண்டு வரப்பட்டுக் கவனிப்பின்றிக் கிடந்த விக்கிரகங்கள் முறைப்படி பிரதிஷ்டை செய்யப்பட்டு ஒரு கோவிலும் கட்டிக் கும்பாபிஷேகம் நடந்து முடிந்துள்ளது. அடுத்த கோவில் கட்டும் வேலையும் நடந்து வருகிறது. புதிய வீடுகளில் குடியேறிய பிறகு இந்தக் கடவுள்கள், அஜீஸ் நகர் மக்கள் நிலைமையைக் கவனித்தால் ஒழிய ஏதும் நடக்கும் என்று தோன்றவில்லை!

**மா**வட்டத்தின் பல்வேறு பகுதிகளுக்குச் சென்று வந்தோம். பிச்சாவரத்தில் தண்ணீர்ப் பிரச்சினை அப்படியே இருக்கிறது. வருகிற டூரிஸ்ட்டுகள் திரும்பிப் போகும் போது வேறு யாரையும் பிச்சாவரம் போய்ப் பார்க்கச் சொல்லக்கூடாது என்ற தீர்மானத்தோடுதான் திரும்புகிறார்கள்! காட்டேஜ்களுக்குப் பின்னால். உள்ளடங்கியிருக்கிற மந்திரிகளின்— அரசியல் பிரமுகர்களின்— உல்லாசக் கேளிக்கைகளுக்கான பங்களாக்கள் மட்டுமே இப்பகுதியில் தொடர்ந்து 'பிஸி' யாக இயங்க முடியும் போலிருக்கிறது. பொதுவான சுற்றுலாப் பயணிகள் அதிருப்தியோடுதான் திரும்புவார்கள்.

•• கடலூர் நகராட்சிப் பேருந்து நிலையம் எப்போதும் போல் மினி கொத்தவால் சாவடியாகவே அழுக்கும் சகதியும் சீர்கேடுமாய் இருக்கிறது.

•• திருப்பாச்சானூர் மலட்டாற்றுத்தரைப் பால திட்டம் நிதி ஒதுக்கீட்டுக்காகக் காத்திருப்பதாகச் செப்டம்பர் 1986ல் கலெக்டர் சொன்ன பிறகு இன்னமும் அப்படியே காத்திருப்பதாகத்தான் வாசகர் நடராஜன் தெரிவிக்கிறார்.

**'கு**றைகளைச் சுட்டிக் காட்டும் உங்களுக்கு நன்றி சொல்கிறேன்' என்று அப்போது பேட்டியளித்த போது தெரிவித்த கலெக்டர் பண்டா நாம் தெரிவித்த குறைகளைக் குறித்துக் கொண்டு அதிகாரிகளிடமும் குறிக்கச் சொல்லி நடவடிக்கை எடுத்தாரே, பிறகு என்னதான் நடந்தது என்று அறிய விரும்பினோம்.

'கல்கி' இதழ்களில் தெ. ஆ. மாவட்டம் பிரச்னைகள் பற்றி வெளியான சில மாதங்களிலேயே பண்டா மாற்றலாகி விட்டார். அவர் பல உத்தரவுகளைக் கீழ்மட்ட அதிகாரிகளுக்கு அனுப்பித் தகவல்கள் கோரினார் என்று 'நம்பகமான அரசாங்க வட்டாரங்கள்' கடலூரில் தெரிவித்தன.

அதைப் பற்றிய விவரங்களை அறியவும், புதிய கலெக்டர் தங்கவேலு மேற்கொண்ட தொடர் நடவடிக்கைகளை அறியவும் விரும்பி கலெக்டரிடம் பேட்டிக்கு அனுமதி கேட்டோம். நவம்பர் 9, 13 ஆகிய இரண்டு நாட்களில் இருமுறை கடிதம் எழுதி நவம்பர் பத்தொன்பது அன்று கலெக்டர் அலுவலகத்துக்குக் 'கல்கி' நிருபர் வருவதாகவும், சந்திக்க நேரம் ஒதுக்கக் கேட்டும் எழுதியிருந்தோம். இவற்றுக்குப் பதிலே வரவில்லை.

நவம்பர் 19 அன்று நேரில் சென்ற போது, கலெக்டர் தங்கவேலு லீவில் போயிருந்தார். மாவட்ட மக்கள் தொடர்பு அதிகாரி ராமநாதன் கலெக்டர் 24ந் தேதி லீவிலிருந்து திரும்பியதும் அவரைக் கேட்டு நேரம் ஒதுக்கினால் தகவல் தெரிவிப்பதாகச் சொன்னார். டிசம்பர் 14 வரை தகவலே வரவில்லை.

தெ. ஆ. மாவட்டத்தில் பணியாற்றும் பல்வேறு அரசு ஊழியர்கள், அரசியல் கட்சியினர், பத்திரிகையாளர்களிடம் விசாரித்ததில் கலெக்டர் தங்கவேலு பொதுவாக உள்ளூர்ப் பத்திரிகையாளர் சந்திப்பைக் கூடத் தவிர்க்கிறார் என்றும் அ.இ.மு.க. பிரமுகர்களைச் சந்திக்கவும் அவர்களோடு பேசவுமே அவருக்கு நேரம் போதுமானதாக இல்லை என்றும் தெரிவித்தார்கள்.

நம்முடைய நிர்வாக யந்திரம் இந்தக் கதியில் இருந்தால் என்ன செய்ய? எத்தனை 'ரீ—விசிட்' போனாலும் நிலைமை மாறியிருக்காது.

— நமது சிறப்பு நிருபர்

---

**அடுத்த இதழில்...**

* ஒரு நல்ல ஆரம்பம்...
  — அட்டைப் படத்திற்கு ஒரு கவிதை

* கோவை மாவட்ட ரீ — விசிட் ரிப்போர்ட்



# பல்செட் இன்றிப் பல்பொடி எதற்கு?



## — தளபதி திடமதி கேட்கிறார்

"இன்றைய ஆளும் கட்சி பல்பொடி மட்டுமே இலவசமாக வழங்குகிறது. அதனால் பல் இல்லாதவர்களுக்கு என்ன உபயோகம்? எங்கள் கட்சி ஆட்சிக்கு வருமானால் முதலில் இலவச பல்செட் வழங்கி, பிறகு இலவச பல்பொடியும் வழங்கும் என்பதை மகிழ்ச்சியோடு தெரிவிக்கிறேன்!"

— எஸ். வி. ஏ. பிரகாஷ்,
செம்பொன்னார் கோயில்.

"ஊழல் விசாரணைக்குக் 'கமிசன்' வேணுமின்னு எதிர்க்கட்சிக்காரங்க கேக்கருங்களே! அவங்க இதற்குக் 'கமிசன்' கேட்கிறது மட்டும் ஊழல் இல்லையா? இதை மக்கள் யோசித்துப் பார்க்க வேண்டுகிறேன்!"

— அ. சா. குருசாமி, திருவாரூர்.



"கட்சி மாறிகளுக்குக் கடும் தண்டனை விதிக்கப்பட வேண்டும் என்ற கருத்தை நான் தே. க. கட்சியில் இருந்த போதும் சொன்னேன், பிறகு மி. க. க. கட்சியில் இருந்த போதும் கூறினேன், இப்போது அ. கா. ந. க. கட்சியில் இருக்கும் போதும் கூறுகிறேன்..."

— ஏ. ஜெகதாம்பாள், சிறுமுகை.



நான் இருபது லட்சம் வாங்கியதாகப் பொய்ப் பிரசாரம் செய்கிறார்கள். நான் லஞ்சம் வாங்கியதை யாராவது நிரூபித்தால் நான் வாங்கிய இருபது லட்சத்தையும் அவரிடமே தந்துவிடத் தயார்!

— வலங்கை ஜி. ராஜசேகர்,
வளையமாபுரம்.







இ.காங்கிரஸை வலுப் படுத்தும் திட்டத்தை ராஜீவ் தெரிவித்துள்ளார்!





# கல்கி

1987 டிசம்பர் 27
மலர் 46 இதழ் 22
பிரபவ மார்கழி 12



## மோசடி மகிழ்கிறது; நேர்மை நடுங்குகிறது!

தக்கர் அவர்களுக்கு அனந்த கோடி நமஸ்காரங்கள்; நடராஜன் அவர்களுக்கும் பணிவான வணக்கங்கள். ஐயன்மீர்! நீங்கள் இருவரும் பல்லாண்டு பல்லாண்டு நன்றாயிருக்க வேண்டும்! விஷயம் புரியாமல் உங்களைச் சிலர் குறைகூறிக் கொண்டிருக்கிறார்கள். நீங்கள் இருவரும் இப்படி ஒரு விசாரணை நடத்தி, இவ்விதம் ஒரு தீர்ப்பு வழங்கியதால்தான் வி. பி. சிங்கின் பெருமை விண்ணளாவ உயர்ந்திருக்கிறது; ராஜீவின் செல்வாக்கு அதள பாதாளத்துக்குச் சரிந்தும் இருக்கிறது. எனவே, இன்று உங்களைக் குறை கூறுகிறவர்கள் எல்லாம் உங்களை வாழ்த்தி நன்றி சொல்வதே முறை!

உங்களுடைய சாதனை மகத்தானது. திருடனைத் தப்ப விட்டுவிட்டு அவனைப் பிடிக்கச் சென்ற போலீஸ்காரர் மீது பழி சுமத்தி, குற்றம் புரிந்ததாகத் தீர்ப்பும் வழங்கும் சாதனையை உலகில் உங்களைத் தவிர வேறு எந்த நீதிபதியுமே செய்திருக்க முடியாது! திருடன் திருடிக் கொண்டு ஓடுகிறான். அவனைப் போலீஸ்காரர் பின் துரத்துகிறார். அப்போது போலீஸ்காரர் சாலையில் சிவப்பு விளக்கு எரிவதைக் கவனியாமல் அதனைக் கடந்து சென்றது தவறு என்று நீங்கள் கண்டிக்கிறீர்கள்! திருடனை விட்டு விட்டீர்கள்!

இந்த நாட்டில் பல திருடர்கள் அந்நியச் செலாவணிச் சட்டங்களை மீறியும் வரி ஏய்ப்புச் செய்தும் அயல் நாடுகளில் பணம் குவிக்கிறார்கள். அந்தப் பணமெல்லாம் இந்திய மக்களுக்குச் சேர வேண்டிய பணம். அந்தத் திருட்டுச் சொத்துக்களைக் கண்டு பிடிக்க வி. பி. சிங் என்ற போலீஸ்காரர் முயன்றார். அதற்காக அவர் ஓர் அயல் நாட்டுத் துப்பறியும் நிறுவனத்தைத் தேர்ந்தெடுத்தார். அவர் மேற்கொண்ட முயற்சியில் நடைமுறைத் தவறுகள் இருப்பதாகத் தீர்ப்பு வழங்கியிருக்கிறீர்கள். உங்கள் தீர்ப்பைக் கண்டு பொருளாதாரக் குற்றங்களைச் செய்து அயல்நாடுகளில் பணம் குவிக்கிற தேசத் துரோகிகள் குதூகலிக்கிறார்கள். அவர்களைத் தட்டிக் கேட்க வேண்டிய நிலையில் உள்ள நேர்மையான அதிகாரிகள் நடுங்குகிறார்கள். இது நீங்கள் இந்நாட்டுக்குச் செய்துள்ள மகத்தான சேவையல்லவா?

'திருடனைக் கண்டுபிடிக்கும்படி எங்களை அரசு கேட்டுக் கொள்ளவில்லையே; போலீஸ்காரர் சிவப்பு விளக்கைக் கடந்தது குற்றமா, இல்லையா என்று விசாரிப்பதுதானே எங்களுக்குத் தரப்பட்ட பணி' என்பதாக நீங்கள் ஒருவேளை வாதாடலாம். அப்படியானால், 'ஏன் சிவப்பு விளக்கைக் கடந்தாய்?' என்று அந்தப் போலீஸ்காரரை நீங்கள் நேரில் அழைத்து விசாரிக்க வேண்டாமா? போலீஸ்காரர் மீது குற்றம் சுமத்தி உங்களை விசாரிக்கும்படி நியமித்தாரே ராஜீவ், அவரைக் குறுக்கு விசாரணை செய்யப் போலீஸ்காரர் வி. பி. சிங்குக்கு நீங்கள் ஒரு வாய்ப்பு அளித்திருக்க வேண்டாமா? இதைத்தான் செய்யவில்லை, வி. பி. சிங் தமது கட்சியை எழுத்து மூலம் தங்களுக்குத் தெரியப்படுத்தினாரே, அதில் பல முக்கிய அம்சங்களை விட்டுவிட்டு, 'நாட்டுக்கு ஆபத்து,' 'பாதுகாப்புக்குக் குந்தகம்,' 'வருந்தத்தக்க நிலவரம்,' 'மர்மமான சூழ்நிலை' என்று நீங்கள் தீர்மானித்துவிட்ட அம்சங்களுக்கு ஏற்ப, இங்கொன்றும் அங்கொன்றுமாகச் சில வரிகளை மட்டும் எடுத்துக் கொண்டு உங்கள் தீர்ப்பில் கையாண்ட சாமர்த்தியத்தை என்னவென்று சொல்லி வியப்பது?

அந்நியச் செலாவணி மோசடிகளைச் செய்வோரைக் கண்டுபிடிக்க அமெரிக்க ஃபேர் ஃபேக்ஸ் நிறுவனத்தை வி. பி. சிங் நியமித்தது தேசப் பாதுகாப்புக்குக் குந்தகமானது; வி. பி. சிங் இதற்கு வாய்மொழி உத்தரவே அளித்தார்; பிரதமருக்கு விவரம் தெரிவிக்கவில்லை; பாதுகாப்பு மந்திரியான பிறகு நிதி அமைச்சக ஃபைலில் குறிப்பெழுதினார் என்றெல்லாம் குற்றங்களை அடுக்கியிருக்கிறீர்கள். ஆனால் பிரதமரின் பாதுகாப்புக்கே கூட அயல் நாட்டு நிபுணர்களின் உதவி கோரப்படுகிறது என்றும், பிரதமர் உள்பட எல்லா அமைச்சர்களும் வாய்மொழி உத்தரவுகளைக் கொடுப்பது சகஜம் என்றும், அதிகாரிகளைக் காப்பாற்றுவதற்காகவே பாதுகாப்பு அமைச்சரான பிறகும் வி. பி. சிங் நிதி அமைச்சகக் கோப்பைக் கேட்டுப் பெற்றுத் தாம் வாய்மொழியாகத் தந்த உத்தரவை உறுதிப்படுத்தி, அதில் குறிப்பெழுதினார் என்பதும், இதையெல்லாம் அறிந்திருந்த பிரதமர் இதில் தவறொன்றும் தாம் காணவில்லை என்று கூறினார் என்பதும், பிரதமர் நிதி மந்திரியான பிறகும் நீண்ட காலம் ஃபேர் ஃபேக்ஸ் நிறுவனத்தின் நியமனத்தை ரத்து செய்யாமல் வைத்திருந்தார் என்பதும் நிதர்சன உண்மைகள்.

ஆனால் இவற்றையெல்லாம் உங்களுடைய தீர்ப்பு பிரதிபலிக்கவில்லை., பிரதிபலிக்காததே நல்லதாகப் போயிற்று! அப்படி பிரதிபலித்திருந்தால் ராஜீவுக்கு அந்நியச் செலாவணிக் குற்றங்களைப் புரியும் மோசடி மன்னர்களைக் கண்டுபிடித்துத் தண்டிக்கும் ஆர்வம் இருப்பதாக அல்லவோ அர்த்தமாகிவிடும்!

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

வட்டமேஜை

# அரசியல் சட்டத்தின் இந்திமொழி பெயர்ப்பு அவசியம்தானா?

* வேண்டுமென்றே விடுதலைப் புலிகளைக் குறை கூறாமல், அதே சமயம் அமைதிப் படையையும் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு ஆடாமல், நடுநிலைமையோடு யாழ்ப்பாணச் செய்திகளை, நேரில் கண்டு சொன்ன திருபருக்குப் பாராட்டுக்கள்!

குத்தாலம்—1. எஸ். ராஜா.

* பல துன்பங்களையும் பொறுத்துக் கொண்டு, 'இனியாவது அமைதி நிலைக்கணும்' என்று கூறிய இந்திராணியின் பண்பு மெய்சிலிர்க்க வைத்தது.

கோவை. உமார்த்தி.

* அமெரிக்காவில் பிறந்து இந்தியப் பிரஜையாகிச் சென்னை நகரத்தின் தூய்மையைப் பாதுகாக்க டெபோரா தியாகராஜனிடம் உள்ள ஆர்வமும் அணுகுமுறையும் நம்மவர்களிடம் இல்லாமற்போனது வேதனையாகத்தான் இருக்கிறது.

கோவிந்தபுத்தூர். குரு. வைத்தியநாதன்.

* கூவம் அட்டைப் படத்தைக்கூட இத்தனை நேர்த்தியாக வெளியிட உம்மால்தான் முடியும்!

சென்னை—15. சைதை வி. முரளி.

* வெளியிடப்பட்டுள்ள வீட்டுவரி விதிப்புக் கொள்கையை விலாவரியாகத் தலையங்கத்தில் விமர்சித்துள்ளீர்கள். தாங்கள் கூறியுள்ள யோசனைகளைப் பின்பற்றினால் நமக்கெல்லாம் நலமாக இருக்கும்!

வடலூர். எஸ். கண்ணன்.

* காப்பியடிக்கும் மாணவர்களுக்குப் பிறகு தண்டனை தரலாம். தொகுதிப் பக்கமே வராத எம். எல். ஏ.க்கள், பொய்யான வாக்குறுதிகளைத் தரும் மந்திரிகள் ஆகியோருக்கெல்லாம் என்ன தண்டனையாம்?

வாணியம்பாடி. இராதா கிருஷ்ணன்.

* சிறைவுக்கு நேரில் சென்றாலும் நாம் இத்தனை விஷயங்களைத் தெரிந்து கொள்ள முடியாது. சிறைவுக்குச் சென்று வந்த வை. கோபால் சாமியின் செய்திகள் பயனுள்ள ஓர் அம்சமாகத் திகழ்ந்தன.

விருதுநகர். கே. டி. ஆர். சேகர்.

* 'அவன்', 'அம்மா', 'விழுதுகள்' என்று மூன்று முத்தான சிறுகதைகளை ஒரே இதழில் வெளியிட்டு என்னைத் திக்குமுக்காடச் செய்து விட்டீர்கள்.

சிங்காரப் பேட்டை. என். சங்கர்.

* அரசியல் சட்டத்தின் இந்தி மொழி பெயர்ப்பு அவசியம்தானா? என்ற கேள்விக்கு, ''கண்டிப்பாக அவசியம்தான்'' என்று தொடங்கி 'தராசு பதில்கள்' பகுதியில் ஒரு பதில் தரப்பட்டுள்ளது. பிரச்னையை சரியாக உணராமல் எழுதப்பட்ட இந்தப் பதில் எனக்கு வியப்பை அளித்தது. அரசியல் சட்டத்தை உருவாக்கிடும் பேறு பெற்றவர்களில் ஒருவன் என்ற முறையில் விளக்க வேண்டியது என்னுடைய கடமை.

ஆங்கில அரசியற் சட்டத்திற்கு இந்தி மொழி பெயர்ப்பிற்கு இப்பொழுது, அவசரமோ, அவசியமோ, தேவையோ கிடையாது என்பது எனது திட்டவட்டமான கருத்து. காரணம், அரசியல் சட்டத்திற்கு 1949—ஆம் ஆண்டில் ஆக்கிய இந்தி மொழி பெயர்ப்பு ஏற்கெனவே இருக்கிறது! மற்ற இந்திய மொழிகளிலும், மொழி பெயர்ப்புக்கள் இருக்கின்றன.

ஆனால், இப்பொழுது இந்த மசோதாவின் மூலம் வர இருக்கும் புதிய மொழி பெயர்ப்பின், நோக்கம் என்ன தெரியுமா? அதற்கு ஆங்கில மூலத்தின் அந்தஸ்து கொடுக்கப்பட வேண்டுமாம். அதாவது நீதி மன்றங்களில் அதைப் பயன்படுத்த வேண்டுமாம்! இது சட்டப்படி செல்லத் தக்கதில்லை என்பது எனது திட்டவட்டமான கருத்து! மொழிபெயர்ப்பு எப்படி மூலம் ஆக முடியும்? ஒரே சட்டத்திற்கு, வெவ்வேறு மொழிகளில், இரண்டு மூலச் சட்டங்கள் இருக்க முடியுமா, என்ன? முடியாது என்பதுடன் கூடாது என்றும் சொல்வேன். இதனால் குழப்பங்களே ஏற்படும்.

இந்தப் புதிய சட்டம், இந்தி பேசாத மாநிலங்களில், சாமர்த்தியமாக இந்தியைத் திணிக்க ஒரு யுக்தியே என்று உறுதியாகக் கூறுவேன். மற்ற இந்திய மொழிகளுக்கு இல்லாத புதிய அந்தஸ்து இதன் மூலம் இந்தி மொழிக்குக் கொடுக்கப்படும். இதனை நாட்டின் பிற மொழிகளைத் தாய் மொழிகளாகக் கொண்டவர்கள் ஒரு நாளும் ஏற்றுக் கொள்ளக் கூடாது.

நயினரகரம்.

தியாகி எல். கிருஷ்ணசாமி பாரதி.

### ஒரு திருத்தம்

சென்ற இதழில் (20.12.87) ''அகாடமி காரர்கள் யோசிக்க வேண்டாமோ?'' என்ற கட்டுரையில், ''வட நாட்டுக் கலைஞர்களுக்கு எடுத்து வைக்கும் கரன்ஸிக் கற்றைகளில் பத்தில் ஒரு பங்காவது கர்நாடக சங்கீத வித்வான்களுக்குக் கொடுக்க மியூசிக் அகாடமிக்கு எப்போதுதான் மனம் வருமோ?'' என்ற வரிகள் இடம் பெற்றுள்ளன. இது சரியான கணிப்பு அல்ல என்று தெரிய வருகிறது. வடநாட்டுக் கலைஞர்களுக்குப் போகவரவும் தங்கவும்தான் செலவுக்குப் பணம் தருவதாகவும் அவர்கள் அகாடமியிடமும் அங்கு குழுமும் ரசிகர்களிடமும் அன்பும் மதிப்பும் கொண்டு இலவசமாகவே கச்சேரி செய்கிறார்கள் என்றும் அறிகிறோம். தவறு நேர்ந்ததற்கு வருந்துகிறோம்.

— ஆசிரியர்

# கல்கி

ஜனவரி 17ம் தேதி

## "ஆகவே, 302 செக்ஷன் படி"

பட்டுக்கோட்டை பிரபாகர்

புதிய தொடர்கதை

பொங்கல் சிறப்பிதழில் ஆரம்பம்

தமயந்தி

# பயணம்

ஐந்தாம் நம்பர் பஸ் வந்து நின்றது. கார்த்திக் எட்டிப் பார்த்தான். ப்ரியா உள்ளிருந்து கையசைத்தாள்.

பாய்ந்து ஏறியவன் அவள் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான். முன் சீட்டில் உட்கார்ந்திருந்த அகிலா ஒரு வினாடி திரும்பிப் பார்த்து விட்டுத் திரும்பவும் கையிலிருந்த புத்தகத்தை வாசிக்க ஆரம்பித்தாள்.

எப்போதும் அவள் அப்படித்தான். ப்ரியா மாதிரி கிடையாது. இந்த மூன்று மாதத்தில் அதிகபட்சம் மூன்று வார்த்தைகளுக்கு மேல் அவள் பேசியது கிடையாது. வலுக்கட்டாயமாய் "ஹலோ" என்றால், கஷ்டப்பட்டுப் புன்னகை செய்து, "ஹலோ," என்று விட்டு நகர்ந்து விடுவாள்.

ப்ரியா அப்படியில்லை. நிறையப் பேசுவாள் — கலை, அரசியல், சினிமா... இன்னும் நிறைய! அவளோடு பயணம் செய்வது ஒரு சுகம். ஜங்ஷனிலிருந்து காலனி ஸ்டாப் வரும் வரை உலகம் மறந்து போகும்.

அதற்காகவே அவள் வரும் பஸ்ஸிற்காகக் கார்த்திக் காத்திருப்பான். அகிலா எப்போதும் முன் சீட்டில் உட்கார்ந்து கொண்டு ஏதாவது ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டே வருவாள்.

"கண்ட்ரி — கர்ல் உங்க ஃப்ரெண்ட்!, இல்லே ப்ரியா!"

ப்ரியா பதில் பேசாமல் சிரிப்பாள். ஒத்துக் கொள்கிறாளா, இல்லையா என்று புரியாத மாதிரி அந்தச் சிரிப்பிருக்கும். ஒத்துக் கொள்கிறாள் என்றே நினைத்துக் கொள்வான். ஒத்துக் கொள்ளா விட்டால் தன் தோழிக்காகக் கோபப்பட்டிருக்க மாட்டாளா?

கார்த்திக் தன் பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் ப்ரியாவைப் பார்த்தான். கூந்தலைப் பின்னாமல் புஸ்ஸென்று விட்டுக் கண்ணில் மைதீட்டிக் கையில்லாத ரவிக்கையோடு, மஞ்சள் நிறச் சேலையை இறக்கிக் கட்டிக் கொண்டு அழகாய், அதை விடக் கவர்ச்சியாய் இருந்தாள்.

"யூ லுக் சார்மிங் டுடே ப்ரியா."

"தாங்க்யூ கார்த்திக். சென்ட்ரல்ல "நியூ டெல்லி" போட்டிருக்காங்களாமே. நாளைக்கு ஈவினிங் போகலாமா?"

"நியூ டெல்லியா? மார்வலஸ் மூவி... வீடியோவிலே பார்த்துட்டேன். ஆனாலும் உங்களோட பார்க்கிறது ஒரு புது அனுபவமா இருக்கும்னு நினைக்கிறேன். லெட்ஸ் கோ."

ஆல்வணிகர் புரத்தில் ஒரு பெண் கைக் குழந்தையோடு ஏறினாள். பெண்கள் சீட்டில் ப்ரியாவுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த கார்த்திக் எழுவான் என்ற நம்பிக்கையில் அவனையே பார்த்தாள்.

"எழுந்திருக்கவா ப்ரியா?"

"டோண்ட் கேர் ஹார். குழந்தையை வெச்சுக்கிட்டு வசதியா உட்கார்ந்து போகணும்னு டாக்ஸில போயிருக்கணும். நீங்க உட்காருங்க கார்த்திக்."

அந்த வார்த்தைகள் அந்தப் பெண்ணின் காதில் விழுந்திருக்க வேண்டும். வேறு பக்கம் முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

லேசாய்க் குற்ற உணர்வு மனத்தை அரித்தது. எழுந்திருக்க வேண்டாம். ப்ரியாவை அவமானப்படுத்துவது போலாகி விடும்.

ஜெயில் ரோட்டின் குளிர்ந்த காற்று மனத்தை வருடியது.

"இந்த மாதிரி இடத்துல கண்ணை மூடிக்கிட்டு மெல்லிசா வீணை இசை கேட்டுக்கிட்டே வாழ்க்கை பூராவும் இருந்திடலாம். இல்லே கார்த்திக்?"

'ஆமாம்' என்று தலையசைத்தவனின் கண்ணில் அகிலா நின்று கொண்டிருப்பது தெரிந்தது. அவள் உட்கார்ந்திருந்த இடத்தில் அந்தப் பெண் — குழந்தையோடு நின்றவள் — உட்கார்ந்திருந்தாள்.

"உங்க ஃப்ரெண்டுக்கு ரொம்ப இளகிய மனசு போலிருக்குது ப்ரியா."

அவன் குரலில் தொனித்த கிண்டலை ப்ரியா ரசித்துச் சிரித்தாள்.

"இன்னிக்கிக் காலைலஒரு டிராயிங் வரைஞ்சேன், கார்த்திக். அது என்னன்னு சொல்லுங்க பார்க்கலாம்?"

"ம்ஹூம்... தெரியலே."

"இந்தப் பெருமாள்புரம் காட்சிதான். வாவ்! என்ன அழகான மலைகள்!"

பஸ் பெருமாள்புரத்திற்குள் நுழைந்தது! இரண்டாவது ஸ்டாப்பில் அகிலா இறங்கிக் கொண்டாள். இறங்குவதற்கு முன் ப்ரியாவைப் பார்த்துச் சின்னதாய் 'வருகிறேன்' என்கிறாற் போல் ஒரு தலையசைப்பு. அவ்வளவுதான்!

"இந்த மாதிரி பொண்ணுங்க இருக்கிறதுலதான் 'விமன்ஸ் லிப்' எல்லாம் அசிங்கமாப் பேசப்படுதுன்னு நினைக்கிறேன், ப்ரியா. வாழ்க்கைல முன்னேறவே வேணும்ங்கிற ஆசை உடையவங்க, அகிலாவை மாதிரியுள்ள பெண்கள். தமிழ்

நாவல்கள்ல பிறைத்தி இருக்கிறதை வாசிச்சே கெட்டுப் போயிடுவாங்க.''

ப்ரியா ரசித்துச் சிரித்தாள்.

"எக்ஸாக்ட்லி. நீங்க சொல்றது நூத்துக்கு நூறு சரி கார்த்திக். நாளைக்கே பாருங்களேன்; இந்த அகிலாவுக்குக் கல்யாணம் ஆகும். கணவன், குழந்தைன்னு மாடா உழைப்பா. டைம்-டேபிள் போட்ட மாதிரி ஒரு நாள் செத்துப் போயிடுவா. இவ்ளோதான் அவளோட வாழ்க்கை.''

கார்த்திக் தலையசைத்தான். ப்ரியாவைப் பார்க்கப் பார்க்கப் பிரமிப்பாய் இருந்தது. இத்தனை அழகுடன், அறிவுடன் ஒரு பெண்ணா?

இறங்கும் இடம் வந்தது. கார்த்திக் எழுந்தான்.

"நாளைக்குச் சாயங்காலம் சென்ட்ரல் வாசல்ல வெயிட் பண்ணுவேன். மறந்துடாதீங்க.''

"நெவர்! வரேன் ப்ரியா. குட்நைட்.''

இறங்கியபோது மனம் துள்ளியது. சந்தோஷத்தில் நனைந்து போய் நாளைக்குப் ப்ரியாவுடன் சேர்ந்து பார்க்கப் போகும் படத்தை நினைத்துத் திமிறிக்கொண்டு இருதயம் படபடவென்று அடித்தது.

"வாப்பா. வா. உனக்காகத்தான் காத்துக் கொண்டிருந்தேன்.''

தரகர் பத்மநாபன் உட்கார்ந்திருந்தார். எதற்காக வந்திருக்கிறார்?

கார்த்திக் முகம் கழுவிக் கொண்டு வந்து உட்கார்ந்தான்.

அப்பா அமைதியாகப் பார்த்துச் சிரித்தார்.

"என்னப்பா?''

"தரகர் சார் ரெண்டு ஜாதகம் கொண்டு வந்திருக்கிறார். ஒண்ணு ரொம்ப ஜோரா எல்லா விஷயத்திலேயும் பொருந்துது. இன்னொண்ணும் பொருந்துது. ஆனா-பண விஷயத்துல கொஞ்சம் இடிக்குது. போட்டோ பார்த்து, எந்தப் பொண்ணு பிடிக்குதுன்னு சொல்லுப்பா.''

"இப்ப எதுக்குப்பா?''

"இந்த வயசுல பண்ணாம ஐம்பது வயசுலயா பண்ணுவே? எங்களுக்கும் வயசாகுது. அதை ஞாபகம் வெச்சுக்கோப்பா.''

பத்மநாபன் கொண்டு வந்திருந்த புகைப் படங்களைக் கொடுத்தார்.

அம்மா சமையலறை வாசலில் நின்று காப்பியை ஆற்றிக் கொண்டே சொன்னாள்...

"அந்த வெளுப்பா இருக்கிற பொண்ணு எனக்குப் பிடிச்சிருக்குடா...''

கார்த்திக்கின் கைகள் நொடியில் நடுங்கின.

ப்ரியாவும், அகிலாவுமா...?

ப்ரியாவை அம்மாவுக்குப் பிடித்திருக்கிறதாமே? எப்படி அவளைக் கல்யாணம் செய்து கொள்ள முடியும்? எத்தனை பேரை 'நியூ டெல்லி' பார்க்கக் கூப்பிட்டிருப்பாளோ?

எப்படி... எப்படி முடியும்?

அகிலா கண் முன் வந்தாள். ப்ரியாவின் வார்த்தைகள் ஞாபகம் வந்தன.

'இந்த அகிலாவுக்குக் கல்யாணம் ஆகும்.



கணவன், குழந்தைன்னு மாடா உழைப்பா. டைம் – டேபிள் போட்ட மாதிரி ஒரு நாள் செத்துப் போயிடுவா. இவ்ளோதான் அவளோட வாழ்க்கை.''

பஸ் பயணத்துக்குப் ப்ரியா சரிதான். வாழ்க்கைப் பயணத்துக்கு...?

அகிலாதான் சரியான துணை.

''பணம் இடிச்சாக் கூட பரவாயில்லே. இந்தப் பொண்ணையே நான் பண்ணிக்கிறேன்.''

''ஏண்டா? அந்தப் பொண்ணு ப்ரியா அழகாவும் இருக்காளே?''

கார்த்திக் கொஞ்ச நேரம் மௌனமாய் இருந்தான்.

''அழகு சாஸ்வதமில்லேயம்மா,'' என்றான் சன்னமாய்.

மனம் நிறைந்திருந்தது.

அன்று இரவு —

அகிலாவைப் பற்றி ஏராளமான கனவுகள் கண்டு கொண்டு கார்த்திக் தூங்கிப் போனான்.

மறுநாள் சாயங்காலம். ஆபீஸ் முடிந்த பிறகு, பஸ் வந்து நின்றதும் கார்த்திக் அவசரமாய் ஏறினான். அகிலா வழக்கமான இடத்தில் ஏதோ ஒரு புத்தகத்தில் மூழ்கியிருந்தாள்.

''ஹலோ... அகிலா...''

''ஹலோ... நீங்க... நீங்க...''

''என்னங்க?''

''ப்ரியாவோட சினிமாவுக்கு வர்றேன்னு சொல்லி இருந்திங்களாமே. அவ இப்ப அவசரத்தோடு முந்திய பஸ்ஸிலேயே தியேட்டருக்குப் போயிருக்கா.''

''ம்ம், சொன்னேன்.''

''பின்னே ஏன் போகலே?''

அகிலாவின் கண்ணில் கேள்விக்குறி மிதந்தது. என்ன கண்கள் இவை! — மருட்சி மீன்கள்.

''வந்து... உங்ககிட்டே பேசணும்னுதான் நான் போகலே.''

''என்கிட்டேயா? என்ன... என்ன விஷயம்?''

பஸ் புறப்பட்டது. அகிலா புத்தகத்தை மூடிவிட்டு நிமிர்ந்து பார்த்தாள்.

''உங்க ஜாதகத்தை நேத்துத் தரகர் கொண்டு வந்தார். ப்ரியாவுடைய ஜாதகத்தையும் தந்தார். நான்... நான்... உங்களைத்தான் 'செலக்ட்' பண்ணினேன்.''

அகிலா இதழ் சிணுங்கப் புன்னகை செய்தாள். இன்று அவளின் ஒவ்வொரு செய்கையும் அழகாயிருந்தது போலிருந்தது.

''என்னைவிட ப்ரியா உங்களுக்கு ஏத்த ஜோடியாக இருப்பா மிஸ்டர் கார்த்திக்.''

''இல்லேங்க அகிலா. குடும்பப் பொண்ணை அவங்களை என்னலைபார்க்கமுடியலே. அவங்க ஒரு நல்ல தோழி. அவ்வளவுதான்.''

பெருந்தன்மை தொனிக்கச் சொல்லிவிட்டு அவளைப் பார்த்தான். அகிலா ஆழமாய் மூச்சை உள்ளிழுத்து விட்டாள்.

''ஐயாம் ஸாரி மிஸ்டர் கார்த்திக். இந்த விஷயத்துல என்னோட சம்மதம் உங்களுக்குக் கிடைக்காது. இந்த விஷயமே எனக்குத் தெரியாது. அப்பா என்னோட ஜாதகத்தைத் தரகர்கிட்ட கொடுத்திருப்பாருன்னு நினைக்கிறேன். எனிவே... ஐயாம் ஸாரி...''

முகத்தை நோக்கி அக்கினிவீசினாற்போலிருந்தது.

''ஏன்... ஏன்?''

அகிலா பதில் சொல்லாமல் புன்னகை செய்தாள்.

''காரணம் உங்களுக்கே புரியும் மிஸ்டர் கார்த்திக்! புரியணும்.''

கார்த்திக் ஸ்தம்பித்துப் போய்ப் பார்த்தான். அகிலா நிதானமாய்ப் புத்தகத்தைத் திறந்து வாசிக்க ஆரம்பித்திருந்தாள்!

---

''நம்ம தலைவர் ஆழ்ந்த சிந்தனை உடையவர்.''

''ஓஹோ... அப்படியா?''

''ஆமாம், இப்பக்கூட பினாமி பெயரில் வீடு கட்டலாமா? அல்லது ஓட்டல் கட்டலாமான்னு சிந்திச்சுக்கிட்டு இருக்கார்!''

— க. இளங்கோ.





''நம்ப பையனுக்குக் கல்யாணம் பண்ணிக் கொள்ளும் ஆசை வந்துவிட்டது என்று எப்படிச் சொல்றீங்க?''

''என்கிட்டே வந்து சமைக்கக் கத்துத் தரச் சொல்றானே!''

- லலிதா செல்லப்பா.

# வேரில்லாத மரங்கள்

## 11

சண்டை.

முதல் சண்டை.

முற்றின முதல் சண்டை

இரண்டு மணி நேரத்துக்கு முகத்தைத் தூக்கி வைத்து, கேட்கும் எந்தக் கேள்விக்கும் பதில் கூறாமல் மௌனித்துக் கடைசியில் கிட்டத்தில் வந்து அணைத்து, 'ஸாரிம்மா' என்றதும் அத்தனையும் மாயமாய் மறந்து போக அவன் மார்பில் புதைந்து கொள்வது போலவோ, அன்றி,

கோபம் என்பதை உணர்த்தச் சாப்பாட்டுத் தட்டை நகர்த்தி, 'எனக்குப் பசியில்லை' என்று முனகி எழுந்து, எதற்கும் ஒற்றை வார்த்தையில் பதில் கூறி, பின்னர் 'நான் இப்ப என்ன பண்ணிட்டேன்னு இப்படி கோவிக்கறீங்க?' என்று கண் கலங்க, உதடு துடிக்க வினவினால், அத்தனையும் மாயமாய் மறைந்து போக, 'உன்னைக் காயப்படுத்தி விட்டேனா' என்கிற தவிப்புடன் ஆரத் தழுவிக் கொள்வது போலவோ,

இல்லாமல் —

இந்த முறை நிஜமான சண்டை.

ஒருவரோடு ஒருவர் பேசாமல், 'நீ எக்கேடு கெட்டாலும் வாஸ்தவமாய் எனக்கு அக்கறை இல்லை' என்கிற கோபத்தோடு வளையவர வைக்கும் சண்டை....

நாலு நாட்கள் முன்பு, "நீ அபார்ஷன் செஞ்சுக்கிட்டா என்ன?" என்று மாதவன் கேட்ட நிமிஷத்தில் கூட இப்படியொரு மனஸ்தாபத்துக்கான வித்து அழுத்தமாக ஊன்றப்பட்டுவிடும் என்று அவர்கள் இருவருமே எதிர்பார்க்கவில்லை...

ஆனாலும் அஸ்திவாரம் போடப்பட்டது என்னமோ அந்த ஒரு கேள்வியின் மூலம் தான்...

"இப்ப குழந்தை பிறக்கறதுல ரெண்டு பேருக்குமே விருப்பம் இல்லை... அதனாலே... அதனாலே... இந்தக் கர்ப்பத்தை உடனடியாக, தாமதப்படுத்தாம கலைச்சிட்டா என்ன வசந்தா?"

தயக்கத்தோடு, ஆனால் தீர்மானமான குரலில் மாதவன் வினவினதும், முகத்தில் அதிர்ச்சி வெளிச்சம்போட, நம்ப முடியாமல் கண்களை விழித்தாள் வசந்தா.

அப்புறம், 'இல்லை — நான்தான் ஏதோ தவறாகக் கேட்டு விட்டேன்' என்று தனக்குத் தானே சமாதானம் செய்து கொண்டு திரும்பினவளின் கையை மாதவன் எட்டிப் பிடித்தான்.

சற்று முன் கேட்ட கேள்வியை மீண்டும் கேட்க, இப்போது வசந்தாவின் உடம்பு லேசாக உதறிப்போட முற்பட்டது.

பேசக் கூடாத சமாசாரத்தை விடாமல் மாதவன் தொடருவது எரிச்சலை விட மனசு பூராவும் வேதனையை வியாபிக்கச் செய்யச் சட்டென்று எழுந்து அழுகையுடன் நாற்காலியில் அமர்ந்து கவிழ்ந்து கொண்டாள்.

அவள் நிலை புரியாமல் மாதவன் கிட்டத்தில் வந்து தலைமுடியைக் கோதிக் கொடுத்தான். சின்னக் குரலில் தொடர்ந்தான்.

"வருத்தப்படாதே, வசு, எனக்கு மட்டும் இப்படி செய்யப் போறதுல சந்தோஷமா என்ன? வேற வழி இல்லையே... நாம சின்ன வயசுக்காரங்க... ரெண்டு வருஷத்துல நல்ல விதமாக் குழந்தை பெத்துக்கிடுவோம்னு தேத்திக்க வேண்டியதுதான். முதல்ல, இப்ப ப்ராக்டிகலாச் செய்ய வேண்டியது என்னன்னு யோசிக்கறது முக்கியம் இல்லையா?"

நீர் கன்னத்தில் கோடு போட, வசந்தா சரக்கென்று தலையை நிமிர்த்தினாள்.

"எது மாது 'ப்ராக்டிகல்'னு சொல்றீங்க? ஒரு உசிரக் கொல்றதையா?"

"தேவையில்லாததை ஒதுக்கிடறது விவேகம் இல்லாம வேற என்ன வசு?"

"பெரிய்ய விவேகம்... இப்படிப் பேச உங்களுக்கு வெட்கமா இல்லை?"

குரல் எடுத்து அவள் கத்த, எதுவும் புரியாமல் மாதவன் விழித்தான்.

"இதுல என்ன வெட்கம், அவமானம் என்ன? லேசா வருத்தம் வேணா..."

அவனை முடிக்க விடாமல் வசந்தா பாய்ந்தாள்.

"நிறுத்துங்க... நான் 'ஷாக்' காயிருக்கறது புரியாம மேல மேல பேசிக்கிட்டே போகாதீங்க... 'அபார்ஷன்'னு சொல்லக்கூட நாகூசுது... இன்னொருதரம்... நீங்க.. நீங்க..."

சிவசங்கரி

சொல்ல வந்ததை முடிக்கத் தெரியாமல் மீண்டும் கவிழ்ந்து கொண்டு வசந்தா அழ முற்பட, மாதவனின் குழப்பம் அதிகமானது.

என்ன பேசுகிறாள் இவள்?

அபார்ஷன் என்று சொல்லக்கூட நா கூசுகிறது என்றால் என்ன அர்த்தம்?

"என்ன சொல்ல வர்றே? இப்ப நமக்குக் குழந்தை பெத்துக்க வசதி இல்ல — அதனால அபார்..."

வசந்தா கையை முன்னால் நீட்டிக் கத்தினாள்.

"ஸ்டாப் இட்... வேணாம்... இந்தப் பேச்சே வேணாம்னு சொல்றதைக் காதுல வாங்காம மேல மேல பேசறீங்களே!"

"ஏன் பேச வேணாம்? ப்ராக்டிகலா என்ன செய்யறதுனு யோசிக்கலாம்னு சொன்னா..."

"வேணாம்... உங்க ப்ராக்டிகல் பேச்சக் கொண்டுபோய் கிணத்துல போடுங்க... எனக்கு எதுவும் வேணாம்... பத்திக்கிட்டு வர்றது கூடப் புரியாம..."

"சரி... பேச வேணாம்... அப்புறம்? சும்மா இருந்தா கர்ப்பம் தானாக் கலைஞ்சிடுமா? நாளாக ஆக, அபார்ஷன் ரொம்பச் சிரமமாயிடும் வசு... புரியாம கோணல்வாதம் பண்ணாதே..."

வசந்தா எழுந்தாள். நாலடி தள்ளிப் போய் நின்று, அவனை அழுத்தமாகப் பார்த்தாள்.

'கோணலாப் பேசல... நேரடியாகவே சொல்லிடறேன். குழந்தை வேணாம்னு தீர்மானம் பண்ணினாத்தானே இந்தப் பேச்சைப் பேச வேண்டி வரும்?"

"அ... அப்படின்னா...?"

"நீங்க சொல்றதுல எனக்கு அடியோட சம்மதம் இல்லேனு அர்த்தம்... இது புரிய இத்தனை நாழியா?"

மாதவன் அவசரமாய் அவள் அருகில் வந்தான் தோளை உலுக்கினான்.

"விளையாடாதே வசு."

"நான் விளையாடல... நீங்கதான் என் மனசைப் புரிஞ்சுக்காம காயப்படுத்தறீங்க.."

"நமக்கு இப்ப குழந்தை பெத்துக்க வசதி இல்லேன்னு தெரிஞ்சப்புறம், மேற்கொண்டு நடக்க வேண்டியது என்னனு யோசனை பண்றது தப்பா வசு?"

"மேற்கொண்டு என்ன செய்யணும்னு



யோசிக்கறது ரொம்ப அவசியம்... நான் இல்லேனு சொல்லல... ஆனா, நீங்க சொல்ற காரியத்துலதான் எனக்கு உடன்பாடு இல்ல...

"ஏன் இல்ல?"

"ஏன்னா... அது பாவச் செயல்... மனுஷனாப் பிறந்த யாரும் செய்யக் கூடாத காரியம்..."

"யார் சொன்னா?"

"எங்க மதம் சொல்லுது... எங்க பைபிள் சொல்லுது..."

"கடவுளே!" — எரிச்சலுடன் முனகிய மாதவன் நாற்காலியில் அமர்ந்து கொண்டான்.

"என்ன ஆச்சு உனக்கு?"

"......"

"என்னத்துக்காக இப்ப திடும்னிட்டு 'ரிலீஜ'ன இந்தப் பிரச்சனைல இழுக்கறே? ம்?"

"......"

"நம்ப குடும்பம் சம்பந்தப்பட்ட எந்தக் காரியத்துலேயும் மதம் குறுக்கிட விடமாட்டோம்னு தீர்மானம் பண்ணினதை மறந்திட்டியா?"

"அதுக்காக? எந்தப் பாவச் செயலுக்கும் சரின்னு சம்மதிச்சு கண்ணை மூடிட்டு இருக்கச் சொல்றீங்களா?"

"இது பாவச் செயல்னு எப்படிச் சொல்றே வசு?"

"உசிரை அழிக்கறது பாவச் செயல் இல்லாம புண்ணியமா மாது? இப்ப குதர்க்கமா வாதம் பண்றது நீங்களா, நானா?"

மாதவன் பொறுமையன்றி எழுந்து மறுபடியும் அவள் அருகில் வந்தான். கையைப் பற்றி அழைத்து வந்து நாற்காலியில் அமர்த்தித் தானும் அருகில் உட்கார்ந்து கொண்டான்.

"வசு... உன் நிலை எனக்குப் புரியுது... முதன் முதல்ல உண்டாகியிருக்கிற சந்தோஷத்த அனுபவிக்க முடியாம அபார்ஷனைப் பத்திப் பேச வேண்டிய நிர்ப்பந்தம், உனக்கு வேதனை தர்றதை என்னால புரிஞ்சிக்க முடியுது... நான் ஏற்கெனவே சொன்ன மாதிரி எனக்கு மட்டும் வருத்தம் இல்லையாம்மா?"

"வாஸ்தவமாவே ரெண்டு பேருக்கும் வருத்தம்னா எதுக்கு மேல மேல பேசிகிட்டே போகணும்... இதோட விட்டுட வேண்டியதுதானே?"

"என்ன வசு, குழந்தை மாதிரி அடம் பண்ணிகிட்டு? ப்ராக்டிகலாப் பேசாம.."

வசந்தா 'ப்ச்' என்றாள். எழுந்து நின்றாள்.

"கண்ணைக் கட்டிவிட்ட குதிரையாட்டம் சொன்னதையேதான் சொல்லுவேன்னு நீங்க பிடிவாதம் பண்ணினா எனக்கு உங்களோட பேச எதுவுமே இல்லை—நான் உள்ள போறேன். என்ன பேசணுமோ அத்தனையும் தனக்குத்தானே சந்தோஷமாப் பேசிக்கங்க..."

மாதவன் அதட்டினான்.

"நில்லு — அப்ப, என்னதான் செய்யணும்றே?"



"சம்சாரம் கொஞ்சம் எகிறினாப் போதும்...ஒரேயடியா இவரு பணியவைச்சிடுவாரு..."

"எப்படிங்க?"

"சாஷ்டாங்கமா 'காலிலே' விழுந்துடுவாரு. அப்புறம், இவரைத் தூக்க, அவங்க பணிஞ்சுதானே ஆகணும்?"

— ஆர். வசந்தகுமார்.



"என்னது, நீங்க வரதட்சணை வாங்காம கல்யாணம் பண்ணிக்க ரெடின்னாலும் உங்க வீட்ல விடமாட்டேங்கறாங்களா...! யாரு, உங்க அம்மாவா, அப்பாவா?"

"ம்ஹூம், என் சம்சாரமும் சின்ன வீடும்!"

— ஜி. டி. ராஜா.



டாக்டர்: "எல்லாரும் எடை குறையணும்னுதான் கவலைப்படுவாங்க; நீங்க என்னடான்னா சீக்கிரமா, உடம்பு பருக்க ஏதாவது வழி இருக்கான்னு கேக்கறீங்களே!"

அரசியல்வாதி: (டாக்டரிடம்): ஹி, ஹி... என் எடைக்கு எடை 'நாணயம்' தொண்டர்கள் ஏற்பாடு செய்துக்கிட்டிருக்காங்க..."

— ஆர். வசந்தகுமார்.

நடந்தவள் திரும்பாமலேயே பேசினாள்.

"ஒண்ணும் பண்ண வேணாம்னுதான் சொல்றேன்."

"அதாவது அபார்ஷன் செஞ்சுக்க மாட்டேன்றே?"

"ம்"

"கு ழ ந் தை தை ய ப்பெத்துக்கப் போறேன்றே?"

கோபமாக வினவினதற்குப் பதில் கூறுமல், வசந்தா அப்படியே அரை நிமிஷம் நின்றாள்.

அப்புறம், எதையும் புரிந்து கொள்ளாமல் பேசும் உன்னோடு எனக்கென்ன பேச்சு என்கிற பார்வை ஒன்றைப் பார்த்துவிட்டு உள்ளே போனாள்.

அன்று இந்தப் பேச்சு அதோடு முடிந்தது.

அவள் புரிந்து கொள்ளாமல் முரண்டு இருள் என்கிற எரிச்சலுடன் மாதவன் ஆபீஸுக்குப் போக, 'தான் பிடித்த முயலுக்கு மூன்று கால் என்று என்ன பிடிவாதம், அடுத்தவர் உணர்ச்சிகளை மதிக்காமல்' என்கிற கோபத்தில் அலுவலகத்துக்கு லீவு சொல்லிப் போன் பண்ணிவிட்டு நாள் முழுவதும் சுருண்டு படுத்தாள் வசந்தா...

மாலை போய் இரவு வரும் வரையில் இந்த மௌன நாடகம் நீடித்தது.

சமைத்தேன் என்று அவள் பேர் பண்ணியதைச் சாப்பிட்டேன் என்று அவன் பேர் பண்ணின பிறகு, இதை இப்படியே விட்டு விடக் கூடாது என்கிற ஞானோதயம் பிறந்த தினுசில் மாதவன் தானுகப் பேச்சை எடுத்தான்.

"ஒருத்தர் பேர்ல ஒருத்தர் கோவிச்சுக்கிட்டு இருக்கிறதால பிரச்னை தீர்ந்திடப் போறதில்ல... வீணு நாளைக் கடத்தினு நாளைக்குக் கஷ்டம் நமக்குத்தான்..."

"......"

யாரிடமோ, யாரோ பேசுகிற அலட்சியத்துடன் ஒருக்களித்துப் படுத்திருப்பதை வசந்தா தொடர, குரலை உயர்த்தி எரிச்சலுடன் "பேசறது காதுல விழல?" என்றான் மாதவன்.

வசந்தா திரும்பாமலேயே பதில் கூறினாள்.

"நல்லாவே விழுது..."

"அப்ப, பதில் சொல்றது..."

"அதான் காலேலியே சொல்லிட்டேனே..."

"பிடிவாதம் பண்ணாதே வசு..."

வசந்தா எழுந்து உட்கார்ந்தாள்.

"நீங்கதான் அழும்பா இருக்கீங்க.... எங்க மதம் இது 'பாவம்'னு கருதுதுன்னு நான் சொன்னப்புறமும் 'செய், செய்னு' பிடிவாதம் பண்ணினா?"

"பாவம், புண்ணியம் பாக்கற விஷயம் இது இல்ல வசு... இல்லேன்னா அரசாங்கத்துல இதைச் சட்டபூர்வமா அனுமதிச்சிருப்பாங்களா?"

"அரசாங்கம் இன்னிக்கு ஒண்ணு சொல்லும், நாளைக்கு ஒண்ணு சொல்லும்.... அது சட்டம் கொண்டுட்டதைக் காட்டி தலைமுறை தலைமுறையாப் பெரியவங்க 'பாவகாரியம்'னு சொல்லியிருக்கறதைத் துணிஞ்சு செய்யலாமா? போப்பாண்டவர்ல தொடங்கி, அத்தனை பெரியவங்களும் கருக்கலைப்பை எதிர்க்கறாங்க மாது... ஆண்டவன் உருவாக்கற உயிரை அழிக்க மனுஷனுக்கு உரிமை இல்லேன்றது அவங்க கருத்து... யோசிச்சுப் பாத்தா அவங்கள நீங்க மதிக்காததும் புரியும், அவங்க கருத்துல இருக்கற நியாயமும் உங்களுக்குப் புரியும்...

உறுதியான குரலில் பேசுபவளை என்ன சொல்லி வழிக்குக் கொண்டு வருவது என்று புரியாமல் மாது சலிப்புடன் நீளமாய்ப் பெருமூச்சு விட்டான்.

தலை முடியைக் கோதிக் கொண்டான். முகவாயைப் பரக்பரக் கென்று சொறிந்து கொண்டான்.

ஆயாசம் நிறைந்த குரலில் மெதுவாகப் பேசினான்.

"இந்த மாதிரி உன் மனசைக் குறுக்கிப் பேன்னு சத்தியமா நான் நினைக்கவே யில்ல... ரெண்டு வருஷம் குழந்தை வேணாம்னு தீர்மானிச்சுக் கொண்டுதானே அபார்ஷன் செஞ்சிடலாம்னு நான் சொல்றேன்?... உங்க மதமோ பெரியவங்களோ நியாயம்னு நினைக்கிறதை, எதிர்க்கிறது என் நோக்கம் இல்லே... இதை நீ நம்பணும்... வீணுப் பிடிவாதம் பிடிக்காம, கொஞ்சம் அனுசரிக்கப்பாரு... ப்ளீஸ்..."

"இது வரைக்கும் என்னென்ன விஷயத்துல நான் அனுசரிக்கப் போயிருக்கேன்றதை ஒரு நிமிஷம் நினைச்சுப் பார்த்திட்டு அப்புறமாப் புகார் படிங்க மாது... அசைவம் சமைக்கிறேனு? சர்ச்சுக்குப் போறேனு? ஜபம் சொல்றேனு? ஒண்ணும் இல்லே... உங்கள என் காரியம் எதுவும் புண்படுத்திடக் கூடாதுன்னு வாயைத் திறக்காம இருக்கேன்... சரியாச் சொல்லணும்னு, எங்க மதம் குழந்தை உண்டாவதைச் செயற்கையாத் தடுக்கிறது கூட தப்புன்றதை மீறி, உண்டாயிட்டதை கலைக்கறதுதான் பாவம், உண்டாவதைத் தடுக்கறது பாவமில்லேன்னு எனக்கு நானே சமாதானம் செஞ்சுக்கிட்டு மாத்திரைகூட சாப்பிட்டுக்கிட்டுத்தானே இருக்கேன்? அத்தனையும் பலிக்காம குழந்தை வந்திருக்குன்னு அது ஆண்டவன் சித்தம் இல்லியா? எதையும் புரிஞ்சிக்காம 'அனுசரிச்சுப் போ'னு எடுத்தேன், கவிழ்த்தேன்னு பேசினு ஆச்சா?"

மாதவன் கையைப் பின்னுல் கட்டிக் கொண்டு குறுக்கும் நெடுக்கும் நடந்தான்.

"அப்ப, இதான் உன் முடிவா?" என அவன் கேட்க, அவள் "ஆம்" என்று தலை அசைக்க, எதுவும் பதில் பேசாமல் கூடத்து நாற்காலியில் வந்து அமர்ந்து, இரவு முழுவதையும் பெட்ரூமுக்குள் நுழையாமல் கழித்துத் தன் கோபத்தை வெளிப்படுத்த, அவன் நடத்தை குறித்துக் கவலைப்படாமல் இருந்து, அப்படி அவன் புரிந்து கொள்ளாமல் இருப்பதில் தனக்கும் அதிருப்திதான் என்பதை நன்ருகவே வசந்தாவும் உணர வைத்தாள்.

(தொடரும்)



ரஷீதா பீவி: ''குழந்தைகளுக்கு ஆபரேஷன் செஞ்சாங்க...''

# ''கல்கியால நல்லது நடந்திருக்கு..''

அரசாங்கம் என்பது பொதுவாகவே மிதமான வேகத்தில், சாதாரணமாக இயங்கக் கூடிய அமைப்புத்தான். ஏதாவது சிபாரிசுகள், வேறு விசேஷமான கவனிப்புகள் இருந்தால்தான் இந்த இயந்திரத்தின் ஓட்டம் சற்றுத் துரிதமாக நடக்கும். இல்லையென்றால் பத்திரிகைகள் இடையில் புகுந்து எழுதினாலும் சற்றுத் துரிதமாக நடக்கும். அப்படியொரு துரிதத் தன்மையைத்தான் காமராஜர் மாவட்ட ரீ—விசிட்டின் போது பார்த்தோம். சில வேலைகளில் கொஞ்சம் ஜரூரான தன்மை.

ஆவுடையாபுரம் — ஞாபகமிருக்கிறதா? விருதுநகர் பக்கத்திலுள்ள இந்தக் கிராமத்தைச் சேர்ந்த பல குழந்தைகளுக்குத் தண்ணீர் பிரச்னையினால் கால்கள் சூம்பிப் போய் — சின்ன வயதிலேயே முடமானது மாதிரியான நிலையுடன் இருந்த நிலைமையை வெளியிட்டிருந்தோம்; உடனே, ஒருவர் அந்தப் பிரச்னையை சுப்ரீம் கோர்ட்டுக்குக் கொண்டுபோனார். கோர்ட் மேலிருந்து கேள்வியெழுப்ப — அதிகாரிகள் அந்தச் சின்னக் கிராமத்துக்கு ஓடினார்கள். வேன்களும், கார்களும் புழுதிபடிந்த அந்தக் கிராமத்திற்குள் வந்து போயின; டாக்டர்கள் குழு வந்தது; வேறு பத்திரிகைகளிலும் அதுபற்றி எழுதப்பட்டது. மேலும் அதுபற்றிச் சட்டசபையிலும் கேள்வி எழுப்பப்பட்டது.

பாதிக்கப்பட்ட அந்தக் குழந்தைகள் இப்போது எப்படியிருக்கின்றார்கள்? திரும்பவும் போனோம் அந்த ஊருக்கு. நுழைந்ததும், 'கல்கி' என்றதுமே கொஞ்சம் கரிசனமான பார்வை பலரிடமிருந்து. ''உங்களாலே ஊருக்குள்ளே நல்லது சில நடந்திருக்கு! வாங்க...'' என்று கூட்டிக் கொண்டு போனார்கள்.

சமீப காலத்தில் புதிதாகக் கல் பதிக்கப்பட்டுப் புதுப்பிக்கப்பட்டிருந்த 'வாட்டர் டேங்க்'; புதுக்குழாய். ஊருக்குத் தொலைவிலிருந்து நல்ல குடி தண்ணீர் வர ஆரம்பித்து விட்டதில் ஆளாளுக்குச் சந்தோஷம். குழாயைத் திறந்து மூடினார்கள்; சடசடவென்று தண்ணீர்! நனைந்த கையோடு ''எல்லாம் கல்கியாலேதாங்க.... எவ்வளவோ வருஷம் ஊருக்குள்ளே நல்ல தண்ணி வரணும்னு கஷ்டப்பட்டோம். என்னென்னமோ பண்ணிப் பார்த்தாச்சு... நீங்க வந்தீங்க... வந்த கையோடு ஊருக்குள்ளே இப்படி நல்ல தண்ணி வந்திருக்குங்க.'' என்றார்கள் கண்களில் நன்றி கலந்த பார்வையோடு.

''குழந்தைகள் எப்படியிருக்காங்க?''

''வாங்க போவோம்...''

முன்பு பார்த்த ரஷீதா பீவி வீடு. திண்ணையிலேயே, பாதிக்கப்பட்ட குழந்தைகளான சம்சுதீனும், ரம்ஜான் பீவியும் கால்களைப் பரப்பினபடி உட்கார்ந்திருந்தார்கள். கால்களில் எந்தவிதமான மாற்றமும் தெரியவில்லை. கால்கள் சூம்பினபடியே கிடக்கின்றன. ''ஆஸ்பத்திரிக்கெல்லாம் வந்து கூட்டிக்கிட்டுப் போனாங்க. மதுரை பெரியாஸ்பத்திரியிலே வைச்சிருந்து ஆபரேஷனும் பண்ணினாங்க. ஒரு பிரயோஜனமுமில்லை. அப்படியேதானிருக்கு... அப்புறம் டாக்டருங்களும் யாரும் வரலை'' என்றார்கள்.

குழந்தைகளின் பாதங்களுக்கு மேல் ஆபரேஷன் பண்ணப்பட்ட அடையாளத் தழும்புகள். ''நடக்கப் பூட்ஸ் கொடுத்திருக்காங்க. இருந்தாலும் குழந்தைகளாலே எழுந்திருக்கவே முடியலைங்களே... இதோ பாருங்க. முன்னாடி கொஞ்சம் நல்லா எட்டு வைச்சு நடந்துக்கிட்டிருந்த இந்த சம்சுக்கனிக்கும் ஆபரேஷன் நடந்துச்சு. ஆனா ஒரு பலனுமில்லை... முன்னைவிட நடக்கக் கஷ்டப்படறான்...''

அவர்கள் காட்டின சம்சுக்கனி தெத்தித் தத்தி நடந்து போனான். இதே மாதிரி ஆபரேஷன் பண்ணியும் குணமாகாமல் பேசத் திணறியபடி புலம்பினார் மதார்ஷா என்கிற பெரியவர். இன்னும் அங்கங்கே கால்களையே ஒரு பாரமாக இழுத்துத் திரிந்த குழந்தைகள்!

அரசாங்கத் தரப்பில் என்ன சொல்கிறார்கள்? பாதிக்கப்பட்ட முப்பத்தைந்து பேரைப் பரிசோதித்து எட்டுப் பேர் வரை ஆபரேஷன் செய்யப்பட்டிருக்கிறது. ஒன்பது நபர்களுக்கு 'காலிபார்ஸ்' (Callipers) அளிக்கப்பட்டிருக்கிறது. உடற்கூறு மருத்துவர்கள் மூலம் பயிற்சி அளிக்கப்பட்டு வருகிறது. ''குடிநீர் மூலம் உடல் ஊனமுறவில்லை என்பதுதான் பரிசோதனையின் முடிவு'' என்கிறார்கள். 'பாதிக்கப்பட்டவர்கள் பெரும்பாலும் முஸ்லிம்கள். உள்ளூர் முஸ்லிம்கள்



* ஆவுடையாபுரம்: ''எல்லாம் கல்யாலதாங்க...''



எம். துரைசாமிபுரம்: இந்த மேல்நிலைக் குடிநீர்த் தொட்டி கட்டி முடிக்கப்பட்டு விட்டது.

தங்களுக்குள்ளேயே திருமண உறவுகள் செய்து கொள்வதால்தான் இப்படியொரு ஊனமான நிலைமை' என்கிறார்கள் பட்டும் படாமலும்.

திருமண முறையினால்தான் இப்படி என்றால் — அதைச் சற்றுப் பரிவுடன் அரசு தரப்பில் பிரசாரம் செய்ய வேண்டியது அவசியமில்லையா? பாதிக்கப்பட்டிருக்கிற ஏறத்தாழ அறுபதுக்கும் மேற்பட்ட குழந்தைகளின் கதிதான் என்ன? பாதிப்பு குடிநீரால் ஏற்படவில்லை என்று ஒதுங்கிக் கொள்வதை விட — பாதிப்பிற்கான மூல காரணம் களையப்பட வேண்டுமில்லையா?''

'**ப**ஸ் வரணும்னு இடைத் தேர்தல் வரணும்' என்கிற எம். துரைசாமிபுர ஜனங்களது பிரச்னையை வெளியிட்டிருந்தோம். அதாவது இடைத் தேர்தல் வந்தாலோ, பொதுத் தேர்தல் வந்தாலோதான் ஊருக்குப் பஸ் வரும்; இல்லையென்றால் வராது. என்கிற புது மாதிரியான நிலையில் இருந்தார்கள் துரைசாமிபுர ஜனங்கள். இப்பொழுது? இடைத் தேர்தல் வராமலே — 'கல்கி' மூலம் தினமும் ஊருக்குள் பஸ் வந்து போகிறது. காலையிலும், மாலையிலும் இன்னமும் குண்டும் குழியுமாக இருக்கிற பாதையில், பயணிகள் குலுங்கோ குலுங்கென்று குலுங்கத் தினமும் ஓர் ஆச்சரியமாக வந்து போகிறது பஸ். ஊரில் தண்ணீர் டேங்க் முடிக்கப்படாமலிருந்தது என்று நாம் குறிப்பிட்டிருக்க — டேங்க் வேலை உடனடியாக முடிந்திருக்கிறது. டேங்கிற்கான ஏணியை மட்டும் காணோம். (டேங்கைக் கட்டின ஊர்க் காண்ட்ராக்டருக்கு வேண்டாத நபர் யாராவது — கடந்த தேர்தலில் ஏணிச் சின்னத்தில் போட்டியிட்டிருப்பாரோ என்னவோ!) ஆறு மாதமாகத் துப்புரவு பண்ணப்படாத தண்ணீரைத்தான் குடிக்கிறோம்'' என்கிறார்கள் ஊர் மக்கள்.



* எம். துரைசாமிபுரம்: இவர்கள் கோரிக்கை நிறைவேறியது!

**வி**ருதுநகரில் காமராஜர் நினைவாலயம் இருக்கிறதல்லவா? சமீபத்தில் பிரதமர் ராஜீவ் காந்தி கூடப் பார்வையிட்டாரே! அங்கு — காமராஜருடன் முதல்வர் எம். ஜி. ஆர். இருக்கும் படமெல்லாம் பெரிதாக இருக்கும்போது கலைஞர் இருக்கும் படம் மட்டும் ஏன் இல்லை என்று கேட்டிருந்தோம். 'வருகிறது' என்றார்கள் அப்போது. 'வந்து கொண்டே இருக்கிறது' என்கிறார்கள் இப்போது. காமராஜர் நினைவாலயம்தானே! அவரது நினைவில் கூடவா 'சென்சார்?' காமராஜர் நினைவே 'ஃப்ளாஷ் பேக்' காக வருகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். அதில் கலைஞர் இருக்க மாட்டாரா? இதற்கெல்லாம் காமராஜரின் ஆவியே வந்து சுபாசுந்தரம் மாதிரியான போட்டோகிராபரிடம், 'கலைஞரோட இருக்கிற போட்டோ ஒண்ணு போடப்பா' என்று சொல்லி எடுத்துக் கொண்டு போய் வைக்க வேண்டும் போலிருக்கிறது! ஆவியின் வேலையை



* தீபக் ஜெயின்: இப்போதைய கலெக்டர்.

செய்தித் துறை செய்தாலென்ன?

மேலாண்மறை நாட்டில் — கண்மாய் சரிவர அமைக்கப்படாததால் — ஆண்டு தோறும் பிரச்னை. அடிக்கடி உடைப்பு எடுத்து பாதிப்பு. கலெக்டரிடம் நாம் பிரச்னையைக் கொண்டு போன பிறகு, கண்மாய் உடைப்பு தடுத்து நிறுத்தப்பட்டிருக்கிறது. எட்டு லட்சம் ரூபாய்ச் செலவில் பராமரிப்புப் பணி ஆரம்பித்திருக்கிறது. விவசாயிகளுக்குச் சற்று மகிழ்ச்சியாக இருந்தாலும் ஒரு வருத்தம். கண்மாய் சீரமைக்கப்பட்டும் வயலுக்கு வரும் வாய்க்கால்கள் தூர்ந்து போய்க் கிடக்கிறதே என்கிறார்கள். அரசுத் தரப்பில் மார்ச்சிற்குள் அனைத்து வேலைகளையும் முடித்து விடுவோம் என்கிறார்கள். இந்தச் சுறுசுறுப்புக்குப் பாராட்டுக்கள்.

மாவட்ட ரவுண்ட் முடிந்து — விருதுநகர் வந்தால் — நெருக்கடியான, இன்னும் மாற்றப்படாமலிருக்கிற பஸ் ஸ்டாண்ட், நீதிமன்றத்திற்கான வாடகை இடம் 85 விருந்தே விருதுநகரில் ரெடியாக இருந்தும் மன்றம் வராததைச் சொல்லிப் புலம்பும் விருதுநகர் வாசிகள். பிரச்னைகளுடன் — புது கலெக்டர் தீபக் ஜெயினைச் சந்திக்கிறோம். சுற்றிலும் சிறு மீட்டிங் மாதிரி அதிகாரிகள் கூட்டம். முன்பு இருந்த கலெக்டர் எல். என். விஜயராகவனிடம் நாம் கேட்டிருந்த கேள்விகளுக்குப் பதில்களைத் தயாரான நிலையில் வைத்துக் கொண்டு பேசினார்.

"மாநில அரசின் சிறுசேமிப்புத் திட்டத்திற்காகச் சிவகாசியில் வசூலிக்கப்படும் தொகைக்கு ரசீது தராதது பற்றி முறையிட்டிருந்தீர்கள். சிறு சேமிப்பு முதலீடு செய்யும் நபர்கள் நேரடியாக அஞ்சல் அலுவலகத்தில் முதலீடு செய்து, அதற்கான சான்றிதழ்களை உடனுக்குடன் வழங்க ஏற்பாடு செய்திருக்கிறோம். ஸ்ரீவில்லிபுத்தூரில் பல பெண்களை வைத்துத் தவறான தொழிலில் ஈடுபடும் செண்டு என்கிற பெண் மேல் அநேகக் கேஸ்கள் பதிவு பண்ணியிருக்கிறோம். மழைக் காலத்தில் பாலம் இல்லாமல் கஷ்டப்படும் கன்னித்தேவன்பட்டி ஜனங்களுக்காகப் பாலம் கட்டுவதற்காக ஒரு லட்சத்து இருபதாயிரம் ரூபாய்க்கு மதிப்பீடு செய்து ரிப்போர்ட் அனுப்பியிருக்கிறோம். வலையபட்டியைச் சேர்ந்த பார்வையற்றவரான குருசாமிக்கு 86 டிசம்பரில் ஊனமுற்றோர் உதவித் தொகை வழங்க ஏற்பாடு செய்திருக்கின்றோம். ஆவுடையாபுரத்தில், மருத்துவ உதவியோடு, அங்குள்ள சத்துணவுக் கூடத்தையும் பழுது பார்த்திருக்கிறோம். இதே போல துரைசாமிபுரம் பாலத்தையும் ஒரு லட்சத்து ஐம்பதாயிரம் மதிப்பீட்டில் பழுது பார்க்க உத்தேசித்திருக்கிறோம். ராஜபாளையத்திலிருந்து சிவகிரி வரையிலுள்ள மரங்கள் அழிக்கப்பட்டதைத் தெரிவித்திருந்தீர்கள். இப்போது ரோந்துப் பணியை அதிகரித்துக் கடந்த மூன்று மாத காலமாகத் திருட்டுத்தனமாக மரங்கள் களவு போவதைக் குறைத்திருக்கிறோம்" —என்று சொல்லிக்கொண்டே சென்றவரிடம் —



* கன்னித்தேவன்பட்டி: பாலம் கட்ட மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது.

"விருதுநகரிலிருந்து அருப்புக்கோட்டை மெயின் ரோட்டிலுள்ள மரங்கள் வெட்டப்பட்டது குறித்தும் எழுதியிருந்தோம்: இன்றும் தொடர்ந்து வெட்டப்படுகிறது என்கிறார்களே! அதோடு விருதுநகரிலிருந்து சிவகாசி போகிற ரோட்டிலும் மரங்கள் வெட்டப்படுவதாகச் சொல்கிறார்கள். இதற்கெல்லாம் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது?" — என்றோம்.

"மரங்கள் வெட்டுவது தொடர்பாக ஏறத்தாழ இருபத்தியாறு பேர் மேல் கேஸ் போட்டிருக்கிறோம். சில மரங்கள் முதிர்ச்சியடைந்து போனதால், அப்படிப்பட்ட எண்பத்தியாறு மரங்களை மட்டும் ஏலத்தின் மூலம் வெட்ட அனுமதிக்கிறோம். அதே நேரத்தில் பட்டுப் போன மரங்களுக்கு இணையாகப் புது மரங்களை நடுகின்றோம்...

"விருதுநகருக்கான நீதிமன்றம் அமைப்பது குறித்த அனுமதி, ஹைகோர்ட்டிலிருந்து வராததுதான் தாமதத்திற்குக் காரணம். இது போலவே, விருதுநகருக்கான பஸ் ஸ்டாண்டை விரிவுபடுத்த — ஒருங்கிணைந்த நகர வளர்ச்சித் திட்டத்தின் கீழ் எண்பது லட்சம் ரூபாய் கேட்டிருக்கிறோம். அருப்புக்கோட்டைக்கு சாங்ஷன் ஆகிவிட்டது. இனி விருதுநகருக்குக் கிடைக்கலாம்!" என்கிறார் கலெக்டரான தீபக் ஜெயின். மேற்கொண்டு புதிதாக நாம் சொன்ன பிரச்னைகளையும், மற்ற அதிகாரிகளைக் குறித்துக் கொள்ளச் சொல்லி, "நடவடிக்கை எடுக்கிறேன்" என்றார்.

நாம் கவனத்திற்குக் கொண்டு போன பல பிரச்னைகளை, உடனுக்குடன் அக்கறை காட்டி அவை தீர்க்கப்படுவதற்கு உதவிய காமராஜர் மாவட்டத்தின் முந்தைய கலெக்டர் எல். என். விஜயராகவனுக்கும், தற்போதைய கலெக்டர் தீபக் ஜெயின் மற்றும் நிறைவேற உதவிய அதிகாரிகளுக்கும் கல்கியின் சார்பிலும் காமராஜர் மாவட்ட மக்கள் சார்பிலும் நன்றி.

— மணு




# பூர்வ கதை

தமிழகத்தின் சரித்திரத்தில் இராஜராஜ சோழர் என்று புகழ் பெற்ற அருள்மொழி வர்மர் இளவரசராயிருந்த சமயத்தில் இலங்கையில் சோழ நாட்டுப் படைகளுக்குத் தலைமை வகித்துப் போர் நடத்திக் கொண்டிருந்தார். அவருடைய தந்தை சுந்தர சோழ சக்கரவர்த்தி நோய் வாய்ப்பட்டுத் தஞ்சையில் படுத்த படுக்கையில் இருந்தார். சுந்தர சோழரின் மூத்த குமாரரும் பட்டத்து இளவரசருமான ஆதித்த கரிகாலர் காஞ்சியில் தங்கியிருந்தார். இரண்டு இராஜ குமாரர்களுக்கும் நடுவில் பிறந்தவரான குந்தவை பழையாறை நகரில் செம்பியன் மாதேவியின் ஆதரவில் இருந்து வந்தார்.

சோழ சாம்ராஜ்யத்துப் பெருந்தரத்து அதிகாரிகளிலே மிக முக்கியமானவர்கள் அண்ணன் தம்பிகளான பழுவேட்டரையர்கள். பெரிய பழுவேட்டரையர் ஏறக் குறையச் சோழ நாட்டின் சர்வாதிகாரி பதவியை வகித்து வந்தார். சாம்ராஜ்யத்தின் தன பொக்கிஷமும் தானிய பண்டகசாலையும் அவருடைய வசத்தில் இருந்து வந்தன. சின்னப் பழுவேட்டரையர் தஞ்சைக் கோட்டையின் தளபதி பதவியை வகித்து வந்தார். சுந்தர சோழ சக்கரவர்த்தி பெரிதும் இந்த இரு சகோதரர்களின் ஆதிக்கத்தின் கீழ் இருந்தார்.



பெரிய பழுவேட்டரையர் முதுமைப் பிராயத்தில் நந்தினி என்னும் அழகிய பெண்ணை மணந்தார். நந்தினியும் குந்தவையும் ஒருவரையொருவர் துவேஷித்தனர். ஒருவரையொருவர் அவமானப்படுத்தவும் பழிவாங்கவும் சமயம் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

நந்தினியின் தூண்டுதல் காரணமாகப் பெரிய பழுவேட்டரையர் ஒரு பெரிய சதியில் ஈடுபட்டார். சுந்தர சோழரின் இரு புதல்வர்களுக்கும் பட்டமில்லாமல் செய்துவிட்டு, அவருடைய பெரிய தந்தை மகன் மதுராந்தகனைச் சிம்மாசனத்தில் ஏற்றத் தீர்மானித்தார். இதற்குக் கடம்பூர் சம்புவரையர் முதலிய சிற்றரசர்களின் பூரண சம்மதத்தையும் பெற்றார். காஞ்சியிலிருந்த ஆதித்த கரிகாலர் தம் தந்தையைத் தஞ்சையிலிருந்து காஞ்சிக்கு வரும்படி செய்வதற்காகக் காஞ்சியில் ஒரு பொன்மாளிகை கட்டினார். அதை வந்து பார்க்கும்படி தந்தையை வேண்டிக் கொண்டு தஞ்சைக்கு ஓலை கொடுத்து அனுப்பினார். ஓலையை எடுத்துச் சென்றவன் வந்தியத்தேவன் என்னும் பழைய வாணர் குலத்து வீரன். அவன் வழியில் சம்புவரையர் மாளிகையில் தங்கியிருந்தபோது மேற்படி சதியாலோசனையைப் பற்றித் தெரிந்து கொண்

டான். தஞ்சை சென்று சுந்தர சோழரிடம் ஓலையைக் கொடுத்த பிறகு பழையாறைக்குப் போய்க் குந்தவை தேவியைக் கண்டான். அவளிடம் தான் அறிந்ததையெல்லாம் சொன்னான். குந்தவை அவனை இலங்கை சென்று தன் அருமைச் சகோதரனை அழைத்து வரும்படி ஏவினாள். வழியில் பல அபாயங்களுக்குத் தப்பி வந்தியத்தேவன் இலங்கை வந்து அருள்மொழி வர்மரிடம் குந்தவையின் ஓலையைக் கொடுத்தான்.




அதே சமயத்தில் இளவரசரைத் தேடிக் கொண்டு இன்னும் சிலரும் வந்து சேர்ந்தார்கள். முதன் மந்திரி அநிருத்தர் ஆழ்வார்க்கடியானிடம் இளவரசர் இலங்கையிலேயே இருத்தல் நலம் என்று சொல்லி அனுப்பினார். தம்பியைக் கையோடு காஞ்சிக்கு அழைத்து வரும்படி ஆதித்த கரிகாலர் பார்த்திபேந்திரனை அனுப்பியிருந்தார். சோழ குலத்தை அடியோடு கருவறுக்கச் சபதம் செய்திருந்த கொலைகாரர் கூட்டத்தைச் சேர்ந்த இருவரும் இலங்கைக்கு வந்திருந்தார்கள்.

அருள்மொழி வர்மர் இலங்கைக்கு வந்த புதிதில் அவர் தண்டு இறங்கியிருந்த இடத்தை ஊமை ஸ்திரீ ஒருத்தி சுற்றிச் சுற்றி வந்து ஓலமிட்டான். இளவரசர் அவளருகில் சென்று பார்த்தபோது குழந்தைப் பிராயத்தில் தன்னைக் காவேரி நதியில் மூழ்கிப் போய் விடாமல் காப்பாற்றியவள் அவள்தான் என்று அறிந்தார். இளவரசர் தங்கியிருந்த இடம் கொடிய நடுக்கு சுரம் பரவியிருந்த இடம் என்பதை அம்மாதரசி உணர்த்தி அங்கிருந்து போய் விடும்படி எச்சரித்தான்.

அநுராதபுரத்தின் வீதிகளில் அருள்மொழி வர்மரும் வந்தியத்தேவனும் ஆழ்வார்க்கடியானும் மகாபோதி விஹாரத்திலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தபோது அவர்கள் மீது ஒரு பழைய மாளிகையின் முகப்பு இடிந்து விழுவதற்கிருந்தது. அந்தச் சமயத்தில் மேற்கூறிய மூதாட்டி தோன்றிக் கைதட்டி அழைத்து அவர்களைக் காப்பாற்றினாள்.

மூவரும் இளவரசர் வழக்கமாகத் தங்கிய விடுதிக்குச் சென்று படுத்துக் கொண்டார்கள். ஆனால் ஒருவருக்கும் தூக்கம் வரவில்லை. இளவரசர் இலங்கையில் அம்மூதாட்டியைத் தாம் சந்தித்த வரலாற்றை அவர்களுக்குக் கூறினார்.

# அத்தியாயம் 38

# சித்திரங்கள் பேசின!



ளவரசர் சட்டென்று கதையை நிறுத்தி விட்டு "உங்களுக்கு ஏதாவது காலடிச் சத்தம் காதில் விழுந்ததா?" என்று கேட்டார்.

கதையில் முழு கவனம் செலுத்தியிருந்த தோழர்கள் இருவரும் தங்களுக்கு ஒன்றும் கேட்கவில்லை என்றார்கள்.

ஆழ்வார்க்கடியான் சற்று நிதானித்து விட்டு "நாம் உட்கார்ந்திருக்குமிடம் முன்னைவிட இப்போது உஷ்ணமாயிருக்கிறதே!" என்றான்.

"ஏதோ புகை நாற்றம் கூட வருகிறது!" என்றான் வந்தியத்தேவன்.

"ஐயா! இந்த இடத்தில் அபாயம் ஒன்றுமில்லையே?" என்று ஆழ்வார்க்கடியான் கவலையுடன் கேட்டான்.

"அபாயம் ஏதாவது இருந்தால் காவேரி அம்மன் கட்டாயம் வந்து எச்சரிப்பாள். கவலை வேண்டாம்!" என்று இளவரசர் கூறி மேலும் தொடர்ந்து சொன்னார்:—

"அந்த இடத்தை விட்டு உடனே தாவடியைக் கிளப்பிக் கொண்டு புறப்பட்டோம். அப்படியும் நமது வீரர்களில் பத்துப் பேருக்குக் குளிர் காய்ச்சல் வந்து விட்டது. அம்மம்மா! அந்

தக் காய்ச்சல் மிகப் பொல்லாதது. எப்பேர்ப்பட்ட வீரனையும் கோழையாக்கிவிடும். உடம்பெல்லாம் போரில் காயம் பட்டும் கலங்காதவர்கள் மூன்று நாள் காய்ச்சலில் மனம் தளர்ந்து 'ஊருக்குப் போக வேண்டும்' என்று சொல்ல ஆரம்பித்து விடுவார்கள். சோழர்களின் குல தெய்வமான துர்க்கா பரமேஸ்வரிதான் அந்த ஊமை ஸ்திரீயின் உருவத்தில் வந்து எங்களை அங்கிருந்து புறப்படச் செய்தாள் என்று கருதினேன். அதற்குப் பிறகும் தேவி என்னைக் கைவிட்டு விடவில்லை. நான் போகுமிடங்களுக்கெல்லாம் அவளும் தொடர்ந்து வந்து கொண்டிருந்தாள். வன விலங்குகள், மலைப் பாம்புகள், மறைந்திருந்த எதிரிகள் — இத்தகைய பல ஆபத்துக்களிலிருந்து என்னைக் காப்பாற்றினாள். திடீரென்று எப்படித் தோன்றுவாளோ, அப்படியே மறைந்தும் விடுவாள். சில நாளைக்குள் அந்தத் தேவியுடன் முக பாவத்தினாலும் சைகைகளினாலும் பேசும் சக்தியை நான் பெற்று விட்டேன். பெரும்பாலும் அவள் உள்ளத்தில் நினைப்பதை என் நெஞ்சம் தெரிந்து கொண்டு விடும். அது மட்டுமல்ல; அம்மாதரசியைக் கண்ணால் பார்க்காமலேயே அவள் பக்கத்தில் எங்கேயோ இருக்கிறாள் என்பதை நான் அறிந்துகொள்வேன். இப்போது கூட.......... நல்லது; நீங்கள் உடனே சென்று உங்கள் படுக்கையில் படுத்துக் கொள்ளுங்கள். தூக்கம் வராவிட்டாலும் தூங்குவது போல் இருங்கள்! சீக்கிரம்!'' என்றார் இளவரசர்.



அவ்விதமே இருவரும் சென்று படுத்துக் கொண்டார்கள். கண்களை மூடிக் கொள்ளவும் முயன்றார்கள். ஆனால் அவர்களை மீறிய ஆவலினால் கண்ணிமைகள் மூடிக்கொள்ள மறுத்தன.

பார்த்துக் கொண்டிருக்கும்போதே நிலா வெளிச்சம் வந்த பலகணியின் அருகில் ஓர் உருவம் வந்து நின்றது. வீதியில் இடிந்து விழுந்த மாளிகைக்கு எதிரில் பார்த்த அதே ஸ்திரீயின் உருவந்தான். மிக மெல்லிய 'உஸ்' என்ற சத்தம் அங்கிருந்து வந்தது. அருள்மொழிவர்மர் எழுந்து பலகணி ஓரமாகச் சென்றார். வெளியில் நின்ற உருவம் ஏதோ சமிக்ஞை செய்தது. இளவரசர் அந்த அறையில் படுத்திருந்த தன் தோழர்களைச் சுட்டிக் காட்டினார். சமிக்ஞை பாஷையில் அதற்கும் ஏதோ மறுமொழி கிடைத்தது.

உடனே அருள்மொழிவர்மர் தோழர்கள் இருவரையும் தன்னைத் தொடர்ந்து வரும்படி சொல்லிவிட்டு அம்மாளிகையிலிருந்து வெளியேறினார். அந்த மூதாட்டி சென்ற வழியில் மூவரும் மௌனமாக நடந்தார்கள். இருபுறமும் மரங்கள் அடர்ந்து இருள் சூழ்ந்திருந்த பாதையில் அவர்கள் வெகு தூரம் சென்ற பிறகு திடீரென்று நிலா வெளிச்சத்தில் ஒரு அதிசயமான காட்சியைக் கண்டார்கள். கரிய பெரிய யானைகள் பல வரிசையாக நின்று, பிரம்மாண்டமான ஸ்தூபம் ஒன்றைக் காவல் புரிந்து கொண்டிருந்தன. அதைப் பார்த்ததும் வந்தியத்தேவனுடைய மூச்சு நின்றுவிடும் போலிருந்தது. அந்த மூதாட்டியோ சிறிதும் தயங்காமல் யானைக் கூட்டத்தை நோக்கி நடந்தாள். ஆழ்வார்க்கடியான் வந்தியத்தேவன் காதோடு ''அந்த யானைச் சிலைகள் எவ்வளவு தத்ரூபமாக இருக்கின்றன பார்த்தாயா?'' என்று சொன்ன பிறகுதான் வந்தியத்தேவனுடைய திகைப்பு நீங்கியது. ஆயினும் அவனுடைய வியப்பு நீங்கியபாடில்லை.



ஒன்றோடொன்று நெருக்கி இடித்துக் கொண்டு நின்று, அந்த மலை போன்ற ஸ்தூபத்தைத் தாங்கிக் கொண்டிருப்பது போல் அமைக்கப்பட்டிருந்த யானைச் சிலை ஒவ்வொன்றுக்கும் இரண்டு நீண்ட தந்தங்கள் இருந்தன. அவ்விதம் வரிசையாக நின்ற நூற்றுக்கணக்கான யானைகளில் ஒன்றே ஒன்றுக்கு மட்டும் ஒரு தந்தம் ஒடிந்து போயிருந்தது. அந்த யானை அருகில் அவள் சென்றாள். அதன் காலடியில் கிடந்த பெரிய கருங்கல் ஒன்றை அகற்றினாள். அகற்றிய இடத்தில் ஒரு படிக்கட்டு காணப்பட்டது. அதன் வழியாக அவள் இறங்கிச் செல்ல, மற்றவர்களும் பின் தொடர்ந்தார்கள். படிக்கட்டில் இறங்கிச் சிறிது தூரம் குறுகலான வழியில் சென்றதும் ஒரு மண்டபம் காணப்பட்டது. அதில் இரண்டு பெரிய அகல் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன.

விளக்குகளில் ஒன்றைத் தூண்டிவிட்டு அந்த மூதாட்டி கையில் எடுத்துக் கொண்டாள். இளவரசரை மட்டும் தன்னுடன் வரும்படி சமிக்ஞையினால் தெரிவித்தாள். மற்ற இருவரும் இதைப் பற்றி முதலில் சிறிது கவலை கொண்டார்கள். ஆனால் அந்த மூதாட்டி விளக்கைத் தூக்கிப் பிடித்து அந்த மண்டபச் சுவர்களில் உள்ள சித்திரங்களைத்தான் இளவரசருக்குக் காட்டுகிறாள் என்று தெரிந்ததும் அவர்களுடைய கவலை ஓரளவு நீங்கியது.

இளவரசர் அம் மண்டபச் சுவரில் பார்த்த சித்திரங்கள் ஏதோ ஒரு கதையில் நிகழ்ந்த சம்பவங்களை வரிசைக் கிரமமாகக் கூறும் தொடர் சித்திரங்களாகத் தோன்றின. புத்த பகவானின் பூர்வ அவதாரக் கதைகளைப் புத்த விஹாரங்களில் சித்திரித்திருக்கும் முறைப்படி இச் சித்திரங்களும் அமைந்திருந்தன. ஆனால் இவை புத்தரின் அவதார நிகழ்ச்சிகளைக் குறிப்பிடவில்லை. ஒரு மானிடப் பெண்ணின் கதையையே சித்திரித்திருந்தது. அந்தச் சித்திரப் பெண்ணின் முகத் தோற்றம் ஏறக்குறைய இப்போது விளக்குப் பிடித்துக் காட்டிய மூதாட்டியின் முகத்தை ஒத்திருந்தது. ஆகவே இந்த ஊமை ஸ்திரீ தன்னுடைய வரலாற்றையே சித்திரங்களாக எழுதியிருக்கிறாள் என்று இளவரசர் இலகுவாகத் தெரிந்து கொண்டார்.

அவற்றில் முதல் சித்திரம் கடல் சூழ்ந்த தீவில் ஓர் இளம் பெண் தன்னந்தனியாக நிற்பதையும் அவளுடைய தகப்பனார் கட்டு மரம் ஏறி மீன் பிடித்துக்கொண்டு வருவதையும் காட்டியது. பின்னர், அந்தப் பெண் காட்டு வழியே சென்றாள். ஒரு மரத்தின் கிளை மீது ஓர் இளைஞன் உட்கார்ந்திருந்தான். அவன் இராஜ குமாரனைப் போலிருந்தான். அந்த மரத்தின் மீது ஒரு கரடி ஏறிக் கொண்டிருந்தது. இராஜ குமாரன் அதைக் கவனியாமல் வேறு திசையில் பார்த்துக் கொண்டிருந்தான். அந்தப் பெண் கூச்சலிட்டு விட்டு ஓடினாள். கரடி அப்பெண்ணைத் துரத்தியது. மரத்தின் மேலிருந்த இளைஞன் குதித்து வந்து கரடியின் மேல் வேலை எறிந்தான். கரடிக்கும் அவனுக்கும் துவந்த யுத்தம் நடந்தது. அந்தப் பெண் தென்னை மரம் ஒன்றின் மீது சாய்ந்து கொண்டு கரடிக்கும் இளைஞனுக்கும் நடந்த சண்டையைப் பார்த்துக் கொண்டிருந்தாள். கடைசியில் கரடி இறந்து விழுந்தது. இளைஞன் அந்தப் பெண்ணை நெருங்கி வந்தான். அவளுக்குத் தன் நன்றியைத் தெரிவித்தான். ஆனால் அவள் மறுமொழி சொல்லாமல் கண்ணீர் விட்டாள். பிறகு அவள் ஓடிப் போய்த் தன் தந்

# "சிறு துளி பெருவெள்ளம்"னு பெரியவங்க சொல்வாங்க. என் பிள்ளைங்க எதிர்காலத்துக்கு நான் இப்பவே சேமிக்கிறேன். நீங்க?



சேமிப்பது என்பது நம் மன உறுதியைப் பொறுத்த விஷயம், அல்லவா? 'மனமிருந்தால் மார்க்கம் உண்டு' என்ற முதுமொழி இதற்கு மிகவும் பொருந்தும். இப்போது இரெஸ்ட் வழங்கும் ரெகரிங் டெபாஸிட் திட்டம் உங்களுக்கு சுலபமாக சேமிக்கும் வழியைக் காட்டுகிறது!

**உங்களுக்கென இதோ ஓர் எளிய முறை!**

- ஒவ்வொரு மாதமும் ரூ. 50/-ன் மடங்குகளாக குறைந்த பட்சம் ரூ. 100/- எவ்வளவு வேண்டுமானாலும் செலுத்தலாம். எனவே, வீட்டுச் செலவிலிருந்து உங்களால் சேமிக்க முடிந்ததைக் கணக்கில் செலுத்துங்கள்.
- உங்கள் டெபாஸிட்களை உங்கள் வீட்டுக்கு அருகிலுள்ள கனரா வங்கி கிளையில் ரொக்கமாகவோ காசோலையாகவோ செலுத்தலாம். அதிக தூரம் சென்று சிரமபட வேண்டியதில்லை.
- உங்கள் மகன் அல்லது மகள் பெயரிலும் டெபாஸிட் செய்யலாம். அவர்கள் மைனராக இருப்பினும் பரவாயில்லை.
- இரெஸ்ட் திட்டத்தின்படி 1 ஆண்டுக்கு 12%, இரண்டு ஆண்டுகளுக்கு 13%, மூன்று ஆண்டுகளுக்கு 14% விதம் கூட்டு வட்டி கிடைக்கும். விவரம் அறிய, அட்டவணையைப் பாருங்கள்.
- வட்டியாக ரூ. 2500/- வரை நீங்கள் பெற்றாலும் வருமான வரி செலுத்தத் தேவையில்லை. எனவே மாதந்தோறும் ரூ. 3000/- வரையில் ஓர் ஆண்டுக்கு டெபாஸிட் செய்தாலும், ஒரு பைசா கூட வருமான வரி பிடிக்கப்பட மாட்டாது.
- இரெஸ்ட் பிக்ஸட் டெபாஸிட் திட்டமும் வகுத்துள்ளது. எனவே உங்கள் ரெகரிங் டெபாஸிட் முதிர்வடையும் போது, நீங்கள் விரும்பினால் அதனை பிக்ஸட் டெபாஸிட் டாக மாற்றிக் கொள்ளலாம்.

**ரெகரிங் டெபாஸிட் திட்டம்***

| | காலம் (மாதம்) | மாதாந்திர தவணை | முதிர்வு காலம் முடிந்ததும் திருப்பித்தரப்படும் தொகை |
|---|---|---|---|
| குறைந்தபட்ச தொகை ரூ. 100/- மேற்கொண்டு ரூ. 50/-ன் மடங்குகளில் | 12 | ரூ. 100/- | ரூ. 1281/- |
| | 24 | ரூ. 100/- | ரூ. 2754/- |
| | 36 | ரூ. 100/- | ரூ. 4494/- |

*இந்த திட்டம் சென்னை நகரில் மட்டுமே பெற்றுக் கொள்ளப்படும்.

வங்கிகள் அல்லாத பைனான்ஷியல் கம்பெனிகள் (ரிசர்வ் வங்கி) கட்டளைகள், 1977 மற்றும் வங்கிகள் அல்லாத பைனான்ஷியல் கம்பெனிகள் மற்றும்/நானுவித வங்கிகள் அல்லாத கம்பெனிகள் (விளம்பரம்) விதிகள், 1977ல் குறிப்பிட்டுள்ளபடி அளிக்கப்பட வேண்டிய விவரங்கள் கீழே தரப்பட்டுள்ளன:

1. கம்பெனியின் பெயர் : கிரெஸ்ட் டெவலப்மெண்ட் அண்ட் லீஸிங் லிமிடெட் (பெஸ்ட் அண்ட் கிராம்ப்டன் என்ஜினியரிங் லிமிடெட்டிற்கு முழுமையாகச் சொந்தமான ஒரு துணை நிறுவனம்)

2. கம்பெனி நிறுவப்பட்ட தேதி : அக்டோபர் 16, 1982-ல் ஒரு பிரைவேட் கம்பெனியாகத் துவக்கப்பட்டது. நவம்பர் 3, 1982-ல் ஒரு பப்ளிக் லிமிடெட் கம்பெனி ஆனது.

3. கம்பெனி நடத்தும் அலுவல், அதனுடைய துணை நிறுவனங்கள், கிளைகள் மற்றும் யூனிட்டுகள் இருப்பின் அவை பற்றிய தகவல்கள் : தவணை முறை வியாபார அலுவல்கள், இயந்திர சாதன குத்தகை ஆகியவற்றுக்கு நிதி யுதவி அளித்தல், பங்குகளிலும் சொத்துக்கள் அபிவிருத்தியிலும் முதலீடு செய்தல். கம்பெனிக்குத் துணை நிறுவனங்கள் எதுவும் இல்லை.

4. கம்பெனி நிர்வாகம் பற்றிய சுருக்கமான விவரங்கள் : கம்பெனி ஒரு இயக்குநர் குழுவினால் நிர்வகிக்கப்படுகிறது.

5. இயக்குநர்களின் பெயர், முகவரி மற்றும் தொழில்

| பெயர் | முகவரி | தொழில் |
|---|---|---|
| திரு. ஏ. வேணுகோபால் (சேர்மன்) | "இன்வீட்" செனடாப் ரோடு, 2-வது சந்து, சென்னை 18. | கம்பெனி இயக்குநர் |
| திரு. கதிர் கிருஷ்ணமூர்த்தி | 142-A, லஸ் சர்ச் ரோடு மயிலாப்பூர், சென்னை-4. | கம்பெனி இயக்குநர் |
| திரு. என்.வி. கிருஷ்ணன் | 13, யோகாம்பாள் தெரு, சென்னை 17. | சார்ட்டர்டு அக்கவுண்டண்ட் மற்றும் கம்பெனி இயக்குநர் |
| திரு. எச்.எஸ். மஜும்தார் | பிளாட் 103, விக்ரம் அபார்ட்மெண்ட்ஸ், 19/29, ஜான்கி குமர் ஜுஹூ, பம்பாய்-49. | கம்பெனி இயக்குநர் |

6 & 7. விளம்பரத் தேதியிலிருந்து முந்தைய மூன்று வர்த்தக ஆண்டுகளில் கம்பெனியின் லாபங்கள் - வரிக்கு ஒதுக்குவதற்கு முன்பும் பின்பும், மற்றும் கம்பெனியால் அறிவிக்கப்பட்ட டிவிடெண்டுகள்:

| ஆண்டு முடிவு | லாபம் வரிக்கு ஒதுக்கு முன் (ரூ. லட்சங்களில்) | லாபம் வரிக்கு ஒதுக்கிய பின் (ரூ. லட்சங்களில்) | அறிவிக்கப்பட்ட டிவிடெண்டு |
|---|---|---|---|
| 30.9.1984 | 21.50 | 21.50 | 10% (ரூ. 5 லட்சம்) |
| 30.9.1985 | 37.50 | 37.50 | 15% (ரூ. 7.5 லட்சம்) |
| 30.9.1986 | 57.81 | 55.21 | 17.5% (ரூ. 17.5 லட்சம்) |

8. விளம்பரத் தேதியிலிருந்து முந்தைய தணிக்கை செய்யப்பட்ட இரு பாலன்ஸ்ஷீட்டுகளில் கண்டுள்ளபடி கம்பெனியின் நிதிநிலைமை பற்றிய சுருக்கமான விவரங்கள்:

| பொறுப்புகள் | 30.9.86 தேதிப்படி (ரூ. லட்சங்களில்) | 30.9.85 தேதிப்படி (ரூ. லட்சங்களில்) |
|---|---|---|
| பங்கு மூலதனம் | 100.00 | 100.00 |
| ரிசர்வ்களும் உபரியும் | 97.02 | 59.21 |
| ஈடு பெற்ற கடன்கள் | 233.42 | 237.23 |
| ஈடு பெறாத கடன்கள் | 787.81 | 580.45 |
| நடப்பு பொறுப்புகள் மற்றும் ஒதுக்கீடுகள் | 588.18 | 320.12 |
| மொத்தம் | 1806.43 | 1297.01 |

| சொத்துக்கள் | 30.9.86 தேதிப்படி (ரூ. லட்சங்களில்) | 30.9.85 தேதிப்படி (ரூ. லட்சங்களில்) |
|---|---|---|
| நிலையான சொத்துக்கள் | 459.80 | 346.05 |
| முதலீடுகள் | 25.01 | 4.92 |
| நடைமுறை சொத்துக்கள் | 1350.97 | 932.42 |
| கடன்கள் மற்றும் முன்பணங்கள் | 15.65 | 13.62 |
| நானுவித செலவினங்கள் | — | — |
| லாப நஷ்டக் கணக்கு | — | — |
| மொத்தம் | 1806.43 | 1297.01 |

எதிர்பாராமல் நேரக்கூடிய பொறுப்புகள்: இல்லை

9. இந்திய ரிசர்வ் வங்கியின் கட்டளைகளின்படி டெபாஸிட்களாக கம்பெனி பெறக்கூடிய தொகை : ரூ. 1970.20 லட்சங்கள்

செப்டம்பர் 30, 1986 அன்று மேற்படி கட்டளைகளின்படி கம்பெனி வசம் இருந்த டெபாஸிட்களின் மொத்தத் தொகை : ரூ. 488.55 லட்சங்கள்

10. முதிர்வடைந்த/கோரப்படாத டெபாஸிட்கள் : செப்டம்பர் 30, 1986 அன்று கோரப்படாத டெபாஸிட்களைத் தவிர முதிர்ந்த போன டெபாஸிட்கள் எதுவும் கம்பெனியின் வசம் இல்லை.

11. கம்பெனி இதன்மூலம் அறிவிப்பதாவது:

(i) அது இந்திய ரிசர்வ் வங்கியின் கட்டளைகளில் கூறப்பட்டுள்ள ஷரத்துக்களை நிறைவேற்றியுள்ளது.

(ii) இவ்வாறு கட்டளைகளை கம்பெனி நிறைவேற்றியிருப்பதை, டெபாஸிட்களைத் திருப்பித் தருவதற்கு இந்திய ரிசர்வ் வங்கி உத்தரவாதம் தருவதாகக் கருதலாகாது.

(iii) கம்பெனி ஏற்றுக் கொண்டுள்ள டெபாஸிட்கள் ஈடுபெறாதவை. இவை இதர ஈடுபெறாத பொறுப்புகளுடன் சரிசமமாகப் பாவிக்கப்படும்.

விண்ணப்ப நமூனாக்கள் கம்பெனியின் பதிவு பெற்ற அலுவலகம் அல்லது பெஸ்ட் அண்ட் கிராம்ப்டன் என்ஜினியரிங் லிமிடெட்டின் ஏதேனும் ஒரு கிளை அலுவலகம் அல்லது பிக்ஸட் டெபாஸிட் இடங்களின் தரகர்களிடம் கிடைக்கும்.

இயக்குநர்கள் குழுவின் ஆணைப்படி
கிரெஸ்ட் டெவலப்மெண்ட் அண்ட் லீஸிங் லிமிடெட்டிற்காக

எம். நாராயணமூர்த்தி
பிரஸிடெண்ட் & செக்ரட்டரி

**கிரெஸ்ட்** டெவலப்மெண்ட் & லீஸிங் லிமிடெட்

கிரெஸ்ட் டெவலப்மெண்ட் அண்ட் லீஸிங் லிமிடெட்
(பெஸ்ட் அண்ட் கிராம்ப்டன் என்ஜினியரிங் லிமிடெட்டிற்கு முழுமையாகச் சொந்தமான ஒரு துணை நிறுவனம்)

312, அண்ணா சாலை, சென்னை 600 018.
போன்: 452526, 454727, 450611
தந்தி: "CONBEST" டெலக்ஸ்: 041-6833/7870

**Best Crompton**

தையை அழைத்து வந்தான். வந்த வலைஞன் தன் பெண் பேச முடியாத ஊமை என்பதைத் தெரிவித்தான். இராஜகுமாரன் முதலில் வருத்தப் பட்டான். பிறகு வருத்தம் நீங்கி அவ ளுடன் சிநேகம் செய்து கொண்டான். காட்டு மலர்களைக் கொய்து மாலை தொடுத்து அவள் கழுத்தில் போட் டான். இருவரும் கை கோத்துக் கொண்டு காட்டில் திரிந்தார்கள்.

ஒருநாள் பெரிய மரக்கலம் ஒன்று அந்தத் தீவின் சமீபம் வந்தது. அதி லிருந்து சில வீரர்கள் இறங்கி வந்தார் கள். இராஜகுமாரனைக் கண்டு பிடித்து அவனுக்கு வணக்கம் செலுத்தினார்கள். அவனை மரக் கலத்துக்கு வரும்படி வருந்தி அழைத்தார்கள். இராஜகுமா ரன் அந்தப் பெண்ணுக்கு ஆறுதல் கூறி விடை பெற்றுக் கொண்டான். கப்பலில் ஏறிச் சென்றான். அந்தப் பெண் அவன் போன பிறகு ரொம்ப வும் வருத்தப்பட்டுக் கண்ணீர் பெருக் கினாள். அதை அவள் தகப்பன் பார்த் தான். ஒரு படகில் அவளை ஏற்றிக் கொண்டு கடல் கடந்து சென்றான். கலங்கரை விளக்கம் ஒன்றை அடைந்து கரையில் இறங்கினான். அங்கே ஒரு குடும்பத்தார் தகப்பனையும் மகளையும் வரவேற்றார்கள். எல்லாருமாக மாட்டு வண்டியில் ஏறிப் பிரயாணம் போனார் கள். கோட்டை மதில் உள்ள ஒரு பட்டணத்தை அடைந்தார்கள். அங்கே அரண்மனை மேன் மாடத்தில் இராஜகுமாரன் தலையில் கிரீடத்துடன் நின்றான். அவனைச் சூழ்ந்து ஆடை அலங்காரங்கள் புனைந்த பலர் நின் றார்கள். அதைப் பார்த்த அந்த இளம் பெண்ணின் மனம் கலங்கியது. அவள் ஒரே ஓட்டமாக ஓடினாள். கடற்கரையை அடைந்தாள். கலங்கரை விளக்கத்தின் மேலேறிக் கீழே குதித்தாள். அலைகள் அவளைத் தாங்கிக் கொண்டன. பட கில் வந்த ஒருவன் அவளைத் தூக்கிப் படகில் ஏற்றிக் காப்பாற்றினான். அவ ளைப் பேய் பிடித்திருக்கிறதென்று எண்ணி ஒரு கோயிலில் கொண்டு போய் விட்டான். கோயில் பூசாரி அவளுக்கு விபூதி போட்டு வேப்பிலை அடித்தான்.



யாரோ ஒரு பெரிய ராணி சுவாமி தரிசனம் செய்ய அந்தக் கோயிலுக்கு வந்தாள். பூசாரி அந்தப் பெண்ணைப் பற்றி ராணியிடம் சொன்னான். ராணி கர்ப்பந்தரித்திருந்தாள். அந்தப் பெண் ணும் தன்னைப் போலவே கர்ப்பவதி என்று அறிந்தாள். பல்லக்கில் ஏற்றிக் கொண்டு அரண்மனைக்கு அழைத்துப் போனாள். அரண்மனைத் தோட்டத்தில் அந்தப் பெண்ணுக்கு இரண்டு குழந் தைகள் பிறந்தன. ராணி வந்து இரண்டு குழந்தைகளில் ஒன்றைத் தான் வளர்ப்பதாகச் சொன்னாள். முதலில் வலைஞர் பெண் அதை மறுத்தாள். பிறகு யோசித்துப் பார்த்தாள். இரண்டு குழந்தைகளுமே அரண்மனையில் வள ரட்டும் என்று தீர்மானித்தாள். குழந் தைகளை விட்டு விட்டு நள்ளிரவில் ஒருவரிடமும் சொல்லிக் கொள்ளா மல் ஓடிப் போய் விட்டாள். வெகு காலம் காட்டில் திரிந்து கொண்டிருந் தாள். ஆனால் குழந்தைகளைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை அடிக்கடி வந்து விடும். ஆற்றங்கரை ஓரமாக வந்து மரங்களின் மறைவில் ஒளிந்தி ருப்பாள். படகில் ராஜாவும் ராணி யும் குழந்தைகளும் வருவார்கள். தூரத் திலிருந்தபடியே பார்த்து விட்டுப் போய் விடுவாள். ஒரு சமயம் ஒரு குழந்தை படகிலிருந்து தவறி விழுந்து விட்டது. அதையாரும்கவனிக்கவில்லை. இவள் நீரில் மூழ்கிக் குழந்தையை எடுத்துக் கொடுத்தாள். உடனே மீண் டும் நதி வெள்ளத்தில் மூழ்கிச் சென்று அக்கரையை அடைந்து காட்டில் மறைந்து விட்டாள்.


வ்வளவு நிகழ்ச்சிகளும் காவிக் கோட்டினால் தத்ரூப சித்திரங்களாக அச்சுவரில் வரையப்பட்டிருந்தன. இளவரசர் அருள்மொழிவர்மர் அளவில்லா ஆர்வத்துடனும் அதிசயத்துடனும் அச் சித்திரங்களைப் பார்த்துக் கொண்டு வந்தார். கடைசிச் சித்திரம் வந்ததும் இளவரசர், "நதியிலிருந்து காப்பாற்றப்பட்ட சிறுவன் நான்; காப்பாற்றியவள் நீ!" என்று சமிக்ஞையாகச் சுட்டிக் காட்டினார். அந்த மூதாட்டி இளவரசரைக் கட்டி அணைத்துக் கொண்டு உச்சி மோந்தாள்.

பின்னர் அந்த மண்டபத்தின் இன்னொரு மூலைக்கு இளவரசரை அழைத்துச் சென்றாள். அங்கே எழுதியிருந்த சில சித்திரங்களைக் காட்டினாள். அவை அவளுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகள் அல்ல. இளவரசருக்கு நேரக் கூடிய அபாயங்களைப் பற்றி அச்சித்திரங்களின் மூலமாகவும் சமிக்ஞைகளின் மூலமாகவும் எச்சரிக்கை செய்தாள்.

இவ்வளவையும் வந்தியத் தேவனும் ஆழ்வார்க்கடியானும் மண்டபத்தின் ஓரத்தில் நின்று பார்த்துக் கொண்டிருந்தார்கள். நந்தினியின் முகத்தையும் இந்த ஊமை ஸ்திரீயின் முகத்தையும் வந்தியத்தேவன் அடிக்கடி ஒத்திட்டுப் பார்த்தான். அவன் மனத்தில் பற்பல எண்ணங்கள் உதித்தன; பற்பல சந்தேகங்கள் தோன்றின. அவற்றைக் குறித்துப் பேச அது சந்தர்ப்பம் அன்று எனப் பேசாதிருந்தான்.

யானைச் சிலைகள் பாதுகாத்த அந்தரங்க மண்டபத்திலிருந்து அவர்கள் வெளியே வந்தார்கள். மூதாட்டி அவர்களை அழைத்துக் கொண்டு அந்த ஸ்தூபத்தின் சிகரத்தை நோக்கி ஏறினான். அவளுடைய தேக வலிமையைக் குறித்து மற்றவர்கள் அதிசயித்தார்கள். வந்தியத் தேவனுக்கு மிகவும் களைப்பாயிருந்தது. ஆயினும் வெளியில் சொல்லாமல் ஏறினான்.

பாதி ஸ்தூபம் ஏறியதும் நின்று பார்த்தார்கள். நகரத்தின் ஓரிடத்தில் தீயின் ஜ்வாலை கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது.

"ஆகா! மகாஸேன சக்கரவர்த்தியின் புராதன மாளிகை தீப்பற்றி எரி



கிறது!" என்றார் இளவரசர்.

"நாம் படுத்திருந்த இடமா?"

"அதுவேதான்!"

"அங்கே நாம் படுத்துத் தூங்கியிருந்தால்...?"

"நாமும் ஒருவேளை அக்கினி பகவானுக்கு உணவாகியிருப்போம்!"

"அதுதான் நாம் படுத்திருந்த அரண்மனை என்று இத்தனை தூரத்திலிருந்தபடி எதனால் சொல்கிறீர்கள்?"

"மண்டபத்துக்குள்ளே நான் பார்த்த சித்திரங்கள் என்னுடன் பேசின!"

"எங்களுக்குக் கேட்கவில்லையே?"

"அதில் ஒன்றும் அதிசயமில்லை. சித்திரங்கள் ஒரு தனி பாஷையில் பேசும். அந்த பாஷை தெரிந்தவர்களுக்குத்தான் அவற்றின் பேச்சு விளங்கும்."

"அந்தச் சித்திரங்கள் தங்களுக்கு இன்னும் என்ன தெரிவித்தன?"

"என் குடும்ப சம்பந்தமான பல இரகசியங்களைச் சொல்லின. இந்த இலங்கைத் தீவை விட்டு உடனே போய்விடும் படியும் தெரிவித்தன!..."

"சித்திரங்களின் பாஷை வாழ்க! வைஷ்ணவரே! என் கட்சி ஜயித்தது!" என்றான் வந்தியத்தேவன்.

"இளவரசே! சித்திரங்கள் அத்துடன் நிறுத்தவில்லை. இலங்கையில் உள்ள வரையில் கூரையின் கீழ்ப் படுக்க வேண்டாம். வீடுகளின் ஓரமாக நடக்க வேண்டாம். மரங்களின் அடியில் போக வேண்டாம் என்றும் சொல்லவில்லையா?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"சரியாகச் சொன்னீர்! உமக்கு



எப்படித் தெரிந்தது?''

''தங்களுக்குச் சித்திரங்களின் பாஷை தெரியும். அடியேனுக்கு அபிநய பாஷை தெரியும். தங்கள் குல தெய்வம் தங்களிடம் பேசிக் கொண்டிருந்தபோது அத்தெய்வத்தின் அபிநய முக பாவங்களைப் பார்த்துக் கொண்டிருந்தேன்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''சந்தோஷம்; இரவு இன்னும் ஒரு ஜாமந்தான் மிச்சமிருக்கிறது. இந்த ஸ்தூபத்தின் உச்சியில் ஏறிச் சிறிது நேரமாவது படுத்துத் தூங்கி விட்டுப் பொழுது விடிந்ததும் புறப்படுவோம்'' என்றார் அருள்மொழிவர்மர்.

மறுநாள் உதயத்தில் சூரிய கிரணங்கள் சுளீர் என்று அடித்து வந்தியத்தேவனைத் தூக்கத்திலிருந்து எழுப்பின. முதல் நாளிரவு நடந்த உண்மையான நிகழ்ச்சிகள் போதாவென்று சதிகாரர்களும், தீவைப்பவர்களும், ஊமைகளும், செவிடர்களும், மரத்தில் ஏறும் கரடிகளும், பேய் பிசாசுகளும், புத்த பிக்ஷுக்களும், மணிமகுடங்களும் ஒரே குழப்பமாக வந்தியத்தேவனுடைய கனவிலேயும் வந்து துன்புறுத்தினார்கள். சூரிய வெளிச்சத்தில் அவையெல்லாம் மாயக் கனவுகளாகி மறைந்தன. குழப்பமும் பீதியும் பறந்தன.

இளவரசரும் ஆழ்வார்க்கடியானும் முன்னதாக எழுந்து பிரயாணத்துக்கு ஆயத்தமாகியிருப்பதை வந்தியத்தேவன் கண்டான். அவனும் அவசரமாக ஆயத்தமானான். மூன்று பேரும் ஸ்தூப சிகரத்திலிருந்து இறங்கினார்கள். நடுவீதிகளின் வழியாகவே நடந்து சென்று மகாமேக வனத்தை நோக்கிச் சென்றார்கள். அந்த நந்தவனத்தின் மத்தியிலேதான் புராதனமான, ஆயிரத்தைந்நூறு வயதான, மிகவும் புனிதத்தன்மைவாய்ந்த போதி விருட்சம் இருந்தது.

பிக்ஷுக்களும் பிக்ஷுக்களல்லாத பக்தர்கள் பலரும் போதி விருட்சத்தை வலம் வந்தும் மலர்களைச் சொரிந்தும் வணங்கிக் கொண்டிருந்தார்கள்.

இளவரசர் அருள்மொழிவர்மரும் அந்தப் போதி விருட்சத்துக்கு வணக்கம் செலுத்தினார். ''உலகத்தில் இராஜ்யங்களும் இராஜ்யங்களை ஆண்ட மன்னர்களும் மறைந்து போய் விடுவார்கள். ஆனால் தர்மம் என்றென்றைக்கும் நிலைத்து நிற்கும் என்பதற்கு இந்தப் போதி விருட்சம் நிதர்சனமாயிருக்கிறது!'' என்று இளவரசர் மற்ற இருவரையும் பார்த்துக் கூறினார். இப்படிச் சொல்லிக் கொண்டே சுற்று முற்றும் பார்த்தார். ஒரு மூலையில் மூன்று குதிரைகள் பிரயாணத்துக்கு ஆயத்தமாக நின்றன. மூன்று குதிரைகளையும் பிடித்துக் கொண்டு மூன்று பேர் நின்று கொண்டிருந்தார்கள்.

இளவரசர் அங்கே சென்றதும் அவர்கள் மூவரும் முகமலர்ந்து மரியாதையுடன் வணங்கினார்கள். இளவரசர் அவர்களை ஏதோ கேட்டுத் தெரிந்துகொண்டார். வந்தியத்தேவனைப் பார்த்து ''இராத்திரி எரிந்தது நாம் படுத்திருந்த மகாசேனரின் அரண்மனை தான்! நாமும் அதில் எரிந்து போய் விட்டோமோ என்று இவர்கள் பயந்து கொண்டிருந்தார்கள். நம்மை உயிரோடு பார்த்ததும் இவர்களுக்கு சந்தோஷம் தாங்க முடியவில்லை!'' என்றார்.

''ஆயிரத்தைந்நூறு வயதான அரச

## அருள்வாக்கு



பிரம்மசரிய ஆச்ரமத்தில் வேதங்களை ஒருவன் கிரஹித்து விடுகிறான். அப்புறம் 'தியரி'யை 'ப்ராக்டிகல்' ஆக்க வேண்டும். வேதத்தில் சொன்ன கர்மாக்களை யக்ஞங்களைப் பண்ண வேண்டும். அதற்குத் தன்னோடு பிரிக்க முடியாத சொத்தாக ஒரு துணையைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். இவன் வீட்டில் சமையல் முதலான காரியங்கள் நடப்பதற்கும், இவனுடைய இந்திரிய சுகத்தைப் பூர்த்தி பண்ணுவதற்காகவும் மட்டும் ஏற்பட்டவள் அல்ல பத்தினி என்பவள். தர்ம பத்தினி, யக்ஞ பத்தினி என்று அவளுக்குப் பெயர். இவன் செய்யும் தர்மத்தைக் கூட இருந்து உத்ஸாஹப் படுத்தி நடத்த வேண்டியவள் அவள். யக்ஞத்தில் இவன் கூட நிற்க வேண்டியவள். இப்படியாக தேவ சக்திகளை லோகத்துக்கு அனுகூலம் பண்ணித் தருகிற கர்மாக்களுக்கு அவள் பக்கபலமாயிருக்கிறாள்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

மரம் இன்னும் நிற்பது என்னமோ உண்மைதான். ஆனால் தர்மம் செத்துப் போய் எத்தனையோ நாளாகி விட்டது!'' என்று சொன்னான் வந்தியத்தேவன்.

''இனி ஒரு தடவை அவ்விதம் சொல்லாதே! நான் ஒருவன் உயிரோடிருக்கும் போது தர்மம் எப்படிச் சாகும்?'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

மூன்று பேரும் குதிரைகள் மீது ஏறிக் கொண்டு புறப்பட்டார்கள். அனுராதபுர நகரத்தின் வடக்கு வாசல் வழியாக வெளியேறினார்கள். திருவிழாக் கூட்டம் இன்னமும் நகரிலிருந்து நாலாபுறமும் 'ஜேஜே' என்று சென்று கொண்டிருந்தபடியால் இவர்களை யாரும் கவனிக்கவில்லை.

அனுராதபுரத்துக்கு வட கிழக்கில் ஒருகாத தூரத்தில் மகிந்தலை என்னும் சிறிய பட்டணம் இருந்தது. ''அசோக சக்கரவர்த்தியின் குமாரர் மகிந்தர் முதன் முதலில் இந்த ஊரிலேதான் வந்திறங்கிப் புத்த மதத்தை உபதேசிக்கத் தொடங்கினார்! எப்படிப்பட்ட பாக்கியசாலி அவர்! ஆயுதந் தாங்கிய படைகளை அழைத்துக் கொண்டு நாடு கவர்வதற்கு அவர் போகவில்லை. கொலைகாரர்களிடம் சிக்காமல் ஒளிந்து மறைந்து திரிய வேண்டிய அவசியமும் அவருக்கு ஏற்படவில்லை'' என்றார் அருள்மொழிவர்மர்.

''அவருக்குக் கொடுத்து வைத்திருந்தது அவ்வளவுதான்!'' என்று சொன்னான் வந்தியத்தேவன்.

இளவரசர் நகைத்தார்.

''நீர் எப்போதும் என்னை விட்டுப் பிரியவே கூடாது. நீர் பக்கத்தில் இருந்தால் எப்படிப்பட்ட கஷ்டமும் சந்தோஷமாகிவிடும்!'' என்றார் இளவரசர்.

''அதே மாதிரி எப்படிப்பட்ட சந்தோஷமும் கஷ்டமாகிவிடும்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

இச்சமயத்தில் சாலையில் அவர்களுக்கு எதிர்ப் பக்கத்தில் ஒரு புழுதிப் படலம் தெரிந்தது. பல குதிரைகள் நாலுகால் பாய்ச்சலில் வரும் சத்தமும் கேட்டது. சிறிது நேரத்துக்கெல்லாம் சிறிய குதிரைப் படை ஒன்று கண்ணுக்குத் தெரிந்தது. குதிரை வீரர்கள் கையில் பிடித்திருந்த வேல் முனைகள் காலை வெயிலில் பளபளவென்று ஜொலித்தன.

''ஐயா! உறையிலிருந்து கத்தியை உருவுங்கள்!'' என்று எச்சரித்தான் வந்தியத்தேவன்.

(தொடரும்)



# ‘தலை’வருக்குத் ‘தலை’ தீபா‘வலி’

**ரூபாய் இருநூறு பரிசு பெறும் நகைச்சுவை நாடகம்**

காட்சி — 1

(இடம்: ஆபிஸ். கையில் ஒரு கடிதத்துடன் வணங்காமுடி சோகமாக அமர்ந்திருக்கிறான். அவனுடைய நெருங்கிய நண்பன் கிச்சாமி என்கிற கிருஷ்ணசாமி அவனை நோக்கி வருகிறான்.)

கிச்சாமி: என்னடா? ‘சின்ன வீட்டைப்’ பறிகுடுத்தவன் மாதிரி கவலையா இருக்கே? என்ன விஷயம்?

வணங்காமுடி: ‘மாமனார் லெட்டர் போட்டிருக்காருடா.

கிச்: என்ன எழுதியிருக்கார்?

வண: ஒரு வாரம் லீவு போட்டுட்டுத் தலைதீபாவளிக்கு வரச் சொல்லியிருக்கார்...

கிச்: அதிலென்னடா கவலை? உனக்கு வாய்த்திருக்கிறவர் தங்கமான மாமனார். அதை நினைத்து சந்தோஷப்படு! என் மாமனார் என்ன செய்தார் தெரியுமா? அந்தச் சமயம் பார்த்து வீட்டைப் பூட்டிக்கிட்டுக் காசி, ராமேஸ்வரம்னு டூர் போயிட்டார்!

வண: சொல்றதைக் கேளுடா...

கிச்: நான் சொல்றதை நீ கேளு தலைவா! இந்தத் தலைதீபாவளி, டிரஸ், ஸ்வீட், உபசாரமெல்லாம் முதல் வருஷத்துக்கு மட்டும்தான். அதனாலே இப்பவே நல்லா அனுபவிச்சுக்கோ. அப்புறமாக் கிடைக்காது. உனக்குக் கல்யாணமாகி ஒரு மாசம்தான் ஆகுது. ராஜ உபசாரம்தான். ஊம்... ஜமாய்டா தலைவா!

வண: முக்கியமான விஷயத்தை மறந்துட்டு உளறுதேடா கிறுக்கா. தீபாவளின்னு தலைக்கு எண்ணெய் தேய்ச்சுக் குளிக்கணுமா, இல்லையா? அப்போ என் தலையிலே இருக்கிறது உண்மையான முடியில்லை — விக்தான்கிற விஷயம் — என் தலை முழுவதும் மைக்ரோஸ்கோப் வைச்சுத் தேடினாலும், பேருக்கு ஒரு முடி கூடத் தட்டுப்படாதுங்கற விஷயம் — நான் விக் வைச்சு ஏமாற்றிக் கல்யாணம் பண்ணிக்கிட்ட விஷயம் எல்லாமே வெட்ட வெளிச்சமாயிடுமேடா?

கிச்: ஆமா! விஷயம் தெரிஞ்சு போச்சுன்னு மாமனாரும் மச்சினர்களும் சேர்ந்து உன்னைப் புரட்டி எடுத்து ஒத்தடம் கொடுத்து விடுவார்கள். இல்லே? உன் உடம்பு தாங்கும்

தலைவரே!

வண: அதுக்கு முன்னாடி என் தர்மபத்தினி அகிலாண்டேஸ்வரி என்னைப் பிஸ்பிலாக்கிச் சாப்ஸ் பண்ணிடுவாடா!

கிச்: அப்படின்னு ஒண்ணு செய். இன்னிக்கு ராத்திரியே கதவையெல்லாம் இறுக்கமாச் சாத்திக்கிட்டு...

வண: சாத்திக்கிட்டு...

கிச்: பொண்டாட்டி கால்லே உழுந்திடு. ஏதோ தெரியாத்தனமா ஏமாத்திட்டேன். என்னை மன்னிச்சு விட்டுடுன்னு சரண்டர் ஆயிடு!

வண: எமகாதகா! உருப்படுவியா நீ?

கிச்: சரி, அது வேண்டாம் விடு தலைவரே. மாமனார் வீட்டுக்குப் போ. ஆனால் எண்ணெய்க் குளியல் செய்யாதே. எண்ணெய் தேய்த்துக் குளித்தால் உடம்புக்கு ஒத்துக் கொள்ளாது — 'சஸ்னோபில்ஸ்' கம்ப்ளெயின்ட் இருக்குன்னு சொல்லித் தப்பிச்சுடு! எப்படி?

வண: ஐடியாடா மச்சி! தேங்க்யூ! தேங்க்யூ வெரிமச்!

## காட்சி — 2

(வணங்காமுடியும் அவன் மனைவி அகிலாண்டேஸ்வரியும் ஊருக்குப் புறப்படும் நாள் — குளித்துவிட்டுப் பாத்ரூமை விட்டு வெளியே வருகிறான் வணங்காமுடி.)

அகிலாண்டேஸ்வரி: நானும் கல்யாணம் ஆன ஒரு மாசமாப் பார்க்கிறேன்; நீங்க குளிச்சிட்டு வரும்போது தலைமுடி நனையறதையே காணோமே? தலையிலே தண்ணி ஊத்திக் குளிக்கிறதே கிடையாதா?

வண: குளிப்பேனே! குளி... குளிப்பேனே! இப்போ தண்ணீர்ப் பஞ்ச காலம். எதுக்குத் தலையிலே ஊத்தி வேஸ்ட் பண்ணணும்னுதான்! அதுவுமில்லாம, உப்புத் தண்ணியைத் தலையிலே கொட்டிக் குளிச்சா, முடியெல்லாம் கொட்டி வழுக்கையாயிடும்டி. (மனத்திற்குள்: அப்பாடி ஒரு வழியாச் சமாளிச்சாச்சு!) சரி சரி, பேசிக்கிட்டே நிக்காம புறப்படு. பத்து மணி பஸ்ஸைப் பிடிச்சாத்தான் அங்க மணிக்காவது மன்னார்குடி போய்ச் சேர முடியும்!

அகிலா: இதோ... இதோ ஆச்சுங்க. தலைமுடியைப் பின்னிப் போட்டுட்டுப் புறப்பட வேண்டியதுதான்.

வண: (மனத்திற்குள் புலம்புகிறான்) ஐயோ ஆண்டவா! இருபத்தெட்டு வயசிலேயே இப்படி முடியையெல்லாம் பறிச்சு என்னைப் பழி வாங்கிட்டியே...! இப்படிப் பயந்து பயந்து ஸ்விஸ் பாங்க் ரகசியம் மாதிரி பாதுகாக்க வேண்டியதாயிடுச்சே...

## காட்சி — 3

(இடம்: மன்னார்குடி பஸ் நிலையம். திருச்சியில் இருந்து வந்து நின்ற பஸ்ஸில் இருந்து வணங்காமுடியும், அகிலாண்டேஸ்வரியும் இறங்குகிறார்கள். பஸ் நிலையத்திற்கு அருகிலேயே ஒருவன் சைக்கிளில் இளநீர் விற்றுக் கொண்டிருக்கிறான்.)



யாரோ ஒருவர் (இளநீர் விற்பவனிடம்): வழுக்கையை வெட்டுப்பா.

வண: ஐயோ என்னை வெட்டாதே, வெட்டாதே, விட்டுடு. (தன்னை மறந்து அலறுகிறான்.

அகிலா: என்னங்க... என்னாச்சு? ஏன் இப்படிக் கத்துறீங்க?

வண: வழுக்கை... வழுக்கையை வெட்டச் சொல்லி... (தடுமாறுகிறான்) ஒண்ணுமில்லே... ஒண்ணுமில்லே. (தலையைத் தொட்டுப் பார்த்துக் கொள்கிறான் — விக் இருக்கிறதா என்று!) அப்பாடா இருக்கிறது!

அகிலா: என்னங்க? என்ன இருக்கு?

வண: ஒண்ணுமில்லே... பெட்டி, பையெல்லாம் சரியா இருக்குன்னு சொல்ல வந்தேன்.. (காவிரிப் படுகையில் கிடைக்கும் 'குரூட் ஆயில்' மாதிரி வழிகிறது — அசடு!)

அகிலா: சரி சரி! வாயை மூடிக்கிட்டுப் பின்னாடி வாங்க.

வண: சரி தாயே!

(ரிக்ஷா பிடித்து வீட்டை அடைகின்றனர். எல்லோரும் வெளியே வந்து அவர்களை வரவேற்கின்றனர்.)

மரகதம் (மாமியார்): வாங்க மாப்பிளே வாங்க!

ராமனாதன் (மாமனார்): வாங்க மாப்ளே! என்ன இது கறுப்பா இருக்குது?

வண: (தலையைத் தொட்டுப் பார்த்துக் கொள்கிறான்) முடி, முடிதான் மாமா, முடியேதான். முடியைத் தவிர வேறெதுவும் இல்லே.

ராம: அதில்லே மாப்ளே... சட்டையிலே கறுப்பா... மை மாதிரி...

வண: அதுவா! ரிக்ஷாவிலேஇருந்து ஒட்டி





புதுகிளார்க்: ''உன்னுடன் இன்று நாம் 'ஜவர்' ஆனேமுன்னு சொல்லிட்டுப் போருரே. என்ன விஷயம்?''

''லேடி டைப்பிஸ்ட் உஷாவை, ஏற்கெனவே நாலு பேர் காதலிக்கிறேம். அதான்!''

— ஆர். வசந்தகுமார்.

யிருக்கும் மாமா.

(மனத்திற்குள்: நல்லவேளே! பயந்தே போயிட்டேன்!)

(எல்லோரும் உள்ளே போகிருர்கள்.)

வண: மாமனரின் தலையைப் பார்த்து விட்டு — மனத்திற்குள் முணுமுணுக்கிருன்) ஐயோ...! இந்த சாகப் போற கிழத்துக்கெல்லாம் தலைநிறையக் காடு மாதிரி முடியிருக்கே! எனக்குச் சொட்டையாயிடுச்சே...!

(எல்லோரும் ஹாலில் உட்காருகிருர்கள்)

ராம:— எனக்குக் கூட இப்பத்தான் தலை தீபாவளி கொண்டாடின மாதிரி இருக்கு! அதுக்குள்ளே இருபத்தைந்து வருஷம் ஓடிடுச்சு!

(மரகதம் முறைக்கிருள். உடனே பேச்சை நிறுத்திக் கொள்கிருர். சிறிது நேரம் கழித்து மீண்டும் பேசுகிருர்)

மாப்ளே, தலைதீபாவளிக்கு மட்டும்தான் நான் மாமனர் வீட்டுக்குப் போனேன் தெரியுமோ? அடுத்த வருஷமெல்லாம் எங்கள் வீட்டிலேயே தான் கொண்டாடினேம்.

வண:— அப்படியா மாமா? (மனத்திற்குள்: நான் அடுத்த தீபாவளிக்கு இந்த மன்னர் குடிப் பக்கமே தலை வைச்சுப் படுக்க மாட்டேன் — போதுமாய்யா?)

ராஜா:— (முதல் மைத்துனன்):— என்னத் தான் இப்படித் தலைநிறைய முடி வைச்சுக்கிட்டு பழைய ஃபாஷனுவே இருக்கிங்க. காலத்துக்குத் தகுந்த மாதிரி முடி ஸ்டைலை மாத்திக்க வேண்டாமோ?

குமார் (இரண்டாம் மைத்துனன்):— அதானே! எங்களைப் பாருங்க எப்படி ஹேர் ஸ்டைல் வைச்சிருக்கோம்னு! அழகா 'டிஸ்கோ' வெட்டிக்குங்க அத்தான்.

வண:— வேண்டாம், வேண்டாம். டிஸ்கோவும் வேண்டாம். ப்ரேக்கும் வேண்டாம். எனக்கு அகிலாண்டேஸ்வரி மட்டுமே போதும். நான் எப்பவும் ஒரே மாதிரி இருக்கத் தான் விரும்பறேன்.

(அப்போது ராஜாவின் மூன்று வயதுக் குழந்தை கையில் சீப்புடன் வணங்காமுடியை நோக்கி வருகிறது)

குழந்தை (மழலையில்):— மாமா, மாமா நான் உங்களுக்குத் தலை சீவி உடறேன் மாமா (சோபாவின் மேல் ஏறுகிறது)

வண:— வேண்டாம், சும்மா இரு.

குழந்தை:— கலைஞ்சு கிடக்கு மாமா முடி. ஒழுங்கா அடம் பண்ணும சீவிக்கோங்க...

விஜயா (ராஜாவின் மனைவி):— ஆமாங்க நல்லாச் சீவிவிடுவாங்க. சீவிக்குங்க. நீ சீவும்மா...

வண:— வேண்டாம். தலையில் கை வைக்காதே. நானே சீவிக் கொள்கிறேன். (எழுந்து அறைக்குள் ஓடி ஒளிந்து கொள்கிருன்.)

மரகதம்:— ஏன் மாப்பிளே இப்படி ஓடுகிருர்?!

(எல்லோரும் வியப்புடன் பார்க்கின்றனர்)

## காட்சி — 4

(அடுத்த நாள் காலை... வணங்காமுடி ஹால் சோபாவில் பேப்பர் படித்துக் கொண்டிருக்கிருன்)

ராம:— என்ன மாப்ளே! எதுக்குத் தலையிலே காடு மாதிரி இவ்வளவு முடி? சலூனுக்குப் போய் ஒட்ட வெட்டிட்டு வந்துடுங்களேன். அது தானே இப்ப லேட்டஸ்ட் ஃபாஷனும்!

வண:— வேண்டாம் மாமா, நான் திருச்சியில் போய் வெட்டிக் கொள்கிறேன். (பாவிகளே எல்லோரும் என்முடியிலேயே குறியாய் இருக்கீங்களே!)

ராம:— வேணும்னு சலூன்காரரை வீட்டுக்கே அழைச்சுட்டு வரவா மாப்ளே? (இவ்வளவு முடியை வைச்சுக்கிட்டு தீபாவளிக்கு எண்ணெய் ஸ்நானம் பண்றதுன்னு, பத்து லிட்டர் எண்ணெயில்லே வேணும்! ஒரு லிட்டர் முப்பது ரூபான்னு... பத்து லிட்டர்... பேசாம முடியை வெட்டித் தொலையேண்டா மாப்ளே!...)

வண:— வேண்டாம் மாமா. நான் திருச்சியிலேதான் முடிவெட்டறதுன்னு ஒரு விரதம் கடைப்பிடிக்கிறேன்.

ராம:— விரதமா?!.....

வண:— விரதம்னு.. விரதம் இல்லே... ஒரு இக்கட்டு.... அதாவது திருச்சியிலே ஒரு சலூன்காரருக்கு ஐம்பது ரூபாய் தெரியாத்தனமா கடன் குடுத்துட்டேன். திருப்பித் தர மாட்டேன்கிருர். கடனை முடிவெட்டியே கழிச்சிட்டு வர்றேன். இது வரைக்கும் இருபது தடவை வெட்டிக்கிட்டேன். இன்னும் ஐந்து தடவை பாக்கியிருக்கு. அதனுலதான். அந்தச் சலூன்காரர் சிங்கப்பூர் போறதா வேற சொல்லிக்கிட்டிருக்கார். அதுக்குள்ளே பாக்கியைக் கழிச்சாகணும்...

Bournvita

# நல்ல வளர்ச்சி போர்ன்விடா பயிற்சி!

அன்னையர், அறிவர்! கேட்பரீஸ் போர்ன்விடா கோகோ, மால்ட், பால் மற்றும் அசல் சீனியின் ஊட்ட நலன்களைக் கொண்டது. போர்ன்விடா குழந்தைகள் மிக விரும்பும் அத் தனிச் சுவையை பாலின் குணத்துடன் அளிக்கிறது.

தினமும் போர்ன்விடா அளிக்கப்படும் குழந்தைகள் வேலையிலும் விளையாட்டிலும் கூர்மையோடிருக்கிறார்கள். அது, அவர்களுக்கு ஆரோக்கியத்தையும் சுறுசுறுப்பையும் அளிக்கிறது. அவர்களுடைய வளர்ச்சிக்கு எல்லா வகையிலும் நலன் அளிக்கிறது.

அதன் தனிச் சுவையுடன் இணைந்திட்ட இன்றைய வளர்ச்சி.

கேட்பரீஸ்
போர்ன்விடா




OBM/9174 TAM

வாசகர் பங்கு



# தளபதி திடமதி

## பரிசு ரூ-400

அகில உலகப் பிரச்னைகள் முதல் உள்ளூர் நிகழ்ச்சிகள் வரை நமது ஆஸ்தான ஜோக்கர் தளபதி திடமதி 'கமெண்ட்' அடிக்காத விஷயமே கிடையாது. என்ன சொல்வார் என்பதைத்தான் கீழே உள்ள கூப்பனில் நீங்கள் எழுதி அனுப்ப வேண்டும். பிரசுரமானால் பரிசு ரூ. 25/–. தவிர, ஒருவரே எழுதிய துணுக்குகள் சில அடுத்து வரும் பல இதழ்களில் பிரசுரமானால் ஒவ்வொரு முறையும் அவருக்குச் சன்மானம் இரட்டிப்பாகும். அதிகபட்சப் பரிசு ரூ. 400/–. உறை மீது மறக்காமல் "தளபதி திடமதி" என்று குறிப்பிடவும்.

கூப்பன்:

கல்கி இதழ் 27.12.87 — முடிவு தேதி: 5.1.88.

தளபதி திடமதி: "....................

....................

....................

....................

....................

....................

....................

....................

....................

....................

....................

....................

....................

....................

....................

என் பெயர்: ....................

விலாசம்: ....................

....................

மரகதம்:— நம்ப மாப்பிளை எதிலேயும் கெட்டிதாங்க. எவ்வளவு கருரா, சிக்கனமா இருக்கார் பார்த்தீங்களா!

ராம:— அவரை யாருன்னு நினைச்சே. நான் செலக்ட் பண்ணின மாப்பிளைடி. என் மாப்பிளை என்னாட்டமே (என்னைப் போலவே) தான் இருப்பார்! (மனத்திற்குள்: உன் தலைக்கு எண்ணெய் வாங்கிக் கொடுத்து நான் போண்டியாகி, ஆண்டியாகி விடுவேன் போலிருக்கே...)

(வணங்காமுடி தப்பித்தோம் பிழைத்தோம் என்று மீண்டும் பேப்பருக்குள் ஒளிந்து கொள்கிறான்.)

### காட்சி — 5

(தீபாவளிக்கு முதல் நாள் மாலை. ராஜாவும் குமாரும் வாசலில் பட்டாசு வெடிகளைக் கொளுத்துகின்றனர்)

ராஜா:— என்னத்தான் அங்கேயே நிக்கிறீங்க. பக்கத்திலே வர பயமா?

வணை:— பயமா.... ஹி ஹி... இல்லையே... (அருகே செல்கிறான்)

(ராஜா கம்பி மத்தாப்பைச் சுழற்றுகிறான். சுழற்சி வேகத்தில் அது வணங்காமுடியின் தலையை உரசிக் கொண்டு செல்கிறது.)

வணை:— (கத்துகிறான்) நிறுத்து, நிறுத்து. சுத்தாதே தலையில் படுது. (மனத்திற்குள்: பாவி! கம்பியைச் சுத்துறேன்னு என் தலை 'விக்'கைக் கழட்டித் தள்ளிடாதே!)

(அடுத்து யானை வெடி வைக்கிறார்கள். அவ்வெடியின் அதிர்ச்சியில் தன் விக் கழன்று விழுந்து விடுமோ என்று வணங்காமுடி பயப்படுகிறான்.)

குமார்:— அடுத்து ராக்கெட் வைக்கப் போறேன்.

வணை:— எதுக்குடா இதெல்லாம்? பாம்பு மாத்திரை கொளுத்திக் கேப் வெடிச்சாப் பத்தாது? (இந்த மாதிரி ராக்கெட் வைக்க அது ஒருத்தியின் டோப்பா முடியை கழட்டிக் கொண்டு போவதைப் போல, எங்கோ கார்ட்டூன் ஜோக்கில் பார்த்த ஞாபகம் அவனுக்கு!)

குமார்:— நீங்க பயப்படாம நில்லுங்க மாமா! நானில்லே வைக்கிறேனே.

வணை:— எனக்கு அவசரமா பாத்ரூம் போகணும். நான் போகிறேன். (உள்ளே ஓடுகிறான். எல்லோரும் சிரிக்கிறார்கள்)

### காட்சி — 6

(அன்றிரவு டிபன் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்கள். வணங்காமுடியின் தட்டில் வைத்துள்ள இட்லியின் மீது ஒரு முடி கிடக்கிறது. அதை எடுத்துக் கீழே போடுகிறான்)

மரகதம்:— என்ன மாப்பிளை அது?

வணை:— ஒண்ணுமில்லே அத்தை... சும்மா முடி... (மனத்திற்குள்: ம்ம்ம்... இட்லிக்குக்

கூட முடி முளைக்கிறது... எனக்குத்தான்...)

மரகதம்:— மிளகாய்ப் பொடி தொட்டுச் சாப்பிடுங்க மாப்பிள்ளே!

(அவ்வாறே மிளகாய்ப் பொடியைத் தொட்டுச் சாப்பிடுகிறான். அதிகக் காரத்தினால் விக்கல் வந்துவிடுகிறது.)

வண:— விக்... விக் .... விக்...

ராம:— என்ன மாப்ளே விக், விக் ன்னு என்னமோ சொல்றீங்க? என்ன விக் அது?

வண:— (தடுமாறி) விக்கா... விக் .... விக்... விக்... என்கிட்டே ஒண்ணும் விக் இல்லையே. எனக்குத் தெரியாதே.... விக்.. விக்.. விக். (தொடர்ந்து விக்குகிறது) சினிமா நடிகர்கள்தான் தலையில் விக்... விக்... விக்....

மரகதம்:— சரி சரி. சீக்கிரம் சாப்பிட்டுப் படுங்க. காலையில் நாலு மணிக்கே எழுந்து எண்ணெய் ஸ்நானம் பண்ணணும்.

வண:— எண்ணெய்க் குளியலா? அதெல்லாம் என் உடம்புக்கு ஒத்துக்காது அத்தை. அலர்ஜி. உடனே ஈஸ்னோபில்ஸ் வந்துடும். அப்புறம் புஸ்வாணம் விடற சத்தமெல்லாம் கேட்காது. 'தஸ் புஸ்'னு எனக்கு மூச்சு வாங்குற சத்தம் மட்டும்தான் கேட்கும்.

அகிலா:— ஐயையோ! என்னங்க இப்படி பயமுறுத்துறீங்க? அது என்னங்க 'ஈஸ்நோபில்ஸ்'?

ராம:— அது ஒண்ணும் பெரிய வியாதியில்லேம்மா. உலகத்திலே பாதிப் பேருக்கு அது இருக்கு. பத்து ஊசி போட்டாச் சரியாயிடும். நாளைக்குக் காலையிலே நிச்சயம் மாப்பிளைக்கு எண்ணெய்க் குளியல் உண்டு (மனத்திற்குள்: இவன் குளிக்காம இருந்துட்டா எண்ணெய் மிச்சமாகுமே...)

அகிலா:— திருப்பதி வெங்கடாசலபதியே என் வீட்டுக்காரருக்கு இந்த வியாதியைக் குணப்படுத்துப்பா. பெருமாளே! அடுத்த வருசமே உன் சந்நிதிக்கு வந்து அவருக்கு முடியெடுத்து மொட்டை யடிச்சுக் காணிக்கை செலுத்துறேன் திருவேங்கடத்தானே!

வண— (மனத்திற்குள்:) ஐயோ!... தலையைப் பிச்சுக்கலாம் போல இருக்கே.... பிச்சுக்கிட்டா விக் கையோட வந்துடுமே...

## காட்சி — 7

(தீபாவளியன்று அதிகாலை. ராஜாவும், குமாரும் வலுக்கட்டாயமாக வணங்கா முடியை இழுத்து வருகின்றனர்)

வண:— ஐயோ! என்னை விட்டுடுங்க! எண்ணெய் வேண்டாமே!... (திமிறிக் கொண்டு தப்பித்து ஓடுகிறான். மீண்டும் ஓடிப் போய் இழுத்து வந்து உட்கார வைக்கின்றனர்)

வண:— ஆண்டவா! காப்பாத்துடா!

மரகதம்:— ஒண்ணும் பயப்படாதீங்க மாப்பிளே. ஒண்ணும் பண்ணாது. ரெண்டே தேய்... நாலு குத்து... எட்டு மசாஜ்... உடனே குளிச்சிடலாம்...



''கூடிய சீக்கிரம் பொதுத் தேர்தல் வந்துடுமோன்னு சந்தேகமா இருக்கு.''

''ஏன்?''

''நேத்து, நம்ம தொகுதி எம். எல். ஏ. வைப் பார்த்ததும், அவர் கும்பிட்டாரே!''

— ஆர். வசந்தகுமார்.

---

(தலையில் எண்ணெயை ஊற்றுகிறான். ராஜாவும், குமாரும் தலையைப் பிடித்து நன்கு தேய்க்கின்றனர். அவர்கள் மசாஜ் செய்யும் போது 'விக்' கையோடு வந்து விடுகிறது)

இருவரும்:— ஐ! விக்! அத்தான் தலையிலே புட்பாலே விளையாடலாம் போலிருக்கு! பிளேனு இருக்கே!...

(எல்லோரும் வந்து வியப்போடு வணங்காமுடியின் சொட்டைத்தலையை வேடிக்கை பார்க்கிறார்கள். அவனோ திருதிருவென்று எதையோ அபேஸ் பண்ணியவன் போல விழிக்கிறான். அதைப் பார்த்த ராமநாதன் சிரித்துக் கொண்டே பேசுகிறார்...)

ராம:— ஏன் மாப்ளேஇந்தச் சொட்டையை மறைக்கவா, குளிக்க மாட்டேன்னு இவ்வளவு அடம் பிடிச்சீங்க. ப்பூ... இது இயற்கை மாப்பிளே. உண்மையைச் சொன்னா சொட்டையே ஒரு அழகுதான். இப்ப என்னைப் பாருங்க...

(வணங்காமுடி ஒன்றும் புரியாமல் பார்க்கிறான். ராமநாதன் தலையில் கை வைத்து வெடுக்கென்று எதையோ இழுக்கிறார். அவர் அணிந்திருந்த விக் கையோடு வந்து விடுகிறது)

ராம:— ஏண்டி மரகதம் நான் அப்பவே சொல்லலே! என் மாப்பிளையும் என்னுடமே தான் இருப்பார்னு! கரெக்டா இருக்கு பார்த்தியா!

மரகதம்:— இவருக்கும் உங்களை மாதிரியே தான் மாப்பிளே. கல்யாணச் சமயத்திலேயே இவரும் வழுக்கைதான். ஆனா நான் முதலிரவிலேயே அதைக் கண்டு புடிச்சுட்டேன். நீங்க எப்படியோ ஒரு மாசம் சமாளிச்சுட்டீங்க! இவரை விட நீங்க சமர்த்துத்தான்!

# நீர்க் நீழல்வேய்தும்

22

அவனுக்கு உடல் முழுதும் வெல வெலத்தது. சம்பந்தமில்லாமல் மல்ஹோத்ராவின் நினைவு வந்தது. அருவெறுப்பான வம்பில் மாட்டிக் கொண்ட முட்டாள் என்ற கோபத்தில் ஆபீச்கவரி காலத்தில் நம் போட்டோவை நிச்சயம் போட மாட்டார் என்ற மின்னல் எண்ணம் தோன்றி விரைந்தது.

காலடி ஓசை மிக அருகில் கேட்டது. ஒரு பெண்ணுக்கிருக்கும் புத்திசாலித்தனமும் சமயோசிதமும் நமக்கில்லை என்கிற அவமான உணர்வுடன் அதை அமுக்கிய பீதியுடன் கால்கள் பின்ன அவன் ஓடினான். திடீரென்று பின்னால் வாகன ஓசையும் ஹெட் லைட்டின் ஒளியும் அவனை ஊடுருவிப் பாய்ந்தன. ஹாரன் ஒலியா, விசில் ஒலியா என்று விளங்காத குழப்பத்துடன் அவன் சரேலென்று வலப்புறம் உத்தேசமாக ஓடி இருளில் பதுங்கிக் கொண்டான். இதயம் டமாரமடித்தது. மார்பு ஆவேசமாய் விம்மி விம்மித் தணிந்தது.

சுவருடன் ஒன்றிச் செவிகளைக் கூர்மையாக்கிக் கொண்டு நின்றான். வெடியோசை கேட்டது. இரண்டா, மூன்றா, நான்கா என்று புரியவில்லை. வாகனக் கதவு வேகமாகத் திறந்து மூடப்படும் ஓசை; பூட்ஸ் கால்களின் அதிர்ந்த ஓசை; அதட்டலான சிங்களப் பேச்சு. சிறிது நேரத்தில் ஒரு ஜீப் அவன் நின்ற குறுக்குத் தெருவைத் தாண்டிப் பிரதான சாலையில் சென்றது. எந்த மனித அரவமும் இல்லாமல் 'கம்'மென்றிருந்தது எங்கும். இந்தக் குறுக்குத் தெருவில் நுழைந்திருக்காவிட்டால் தானும் அந்த ஜீப்பில் 'அது'வாக— அஃறிணையாகச் சவாரி செய்திருக்க வேண்டும் என்கிற நினைப்பே அடிவயிற்றில் ஜில்லிப்பை ஏற்படுத்திற்று.

ஒவ்வொரு வீட்டுக்குள்ளும் சாலையிலும் அடர்ந்த உயர்ந்த மரங்கள் பரப்பிய இருள் தெரு விளக்கைப் போர்த்தி வெளிச்சத்தை அமுக்கியிருந்தது. போர்வைக்கடியிலிருந்து பலவித ஜந்துக்களின் இரகசிய ஓசைகள். நீண்ட நேரம் அவன் மூச்சை அடக்கி நின்றான். அந்தப் பெண்— சீலியா எங்கே சென்று மறைந்தாள் என்று புரியவில்லை. குண்டோசை கேட்டு யாரும் வெளியில் எட்டிப் பார்க்கவில்லை.

அவன் மிக ஜாக்கிரதையாகப் பிரதான சாலைக்கு வந்து பதுங்கிப் பதுங்கி ஹாவ்லாக் சாலையைத் தேடிக் கொண்டு நடந்தான். மனத்தில் ஏற்பட்டிருந்த குழப்பத்தில், அவன் குருட்டாம் போக்கில் அந்தச் சாலையை அடைந்த போது, மெல்லிய ஆச்சரியம் கூட ஏற்பட்டது. தட்டுத் தடுமாறி விஜயபாலசூர்யாவின் வீட்டை அடைகையில் இனிமேல் இரவுச் சாப்பாட்டை மறந்துவிட வேண்டியதுதான் என்று தீர்மானித்துக் கொண்டான்.

பாலசூர்யாவின் லைப்ரரியில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அவரைப் பார்க்கலாமா என்று யோசித்துக் காலையில் பார்த்துக் கொள்ளலாம் என்று அவன் தன் அறை வாசலுக்குச் சென்று சாவியால் கதவைத் திறந்து உள்ளே சென்றான்.

ஷூவைக் கழற்றி மேஜைக்கடியில் வைக்கும் போது, மேஜை மேல் சீலியாவின் குறிப்பு மறுபடியும் கண்ணில் பட்டது. நம்மை எச்சரித்து விட்டு அவள் ஏன் அந்த நேரத்தில் வெளியே போனாள் என்று அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவளுக்கு வீடு வாசல் கிடையாதா? அவளும் அவனைப் போல் எங்கேயோ அறையெடுத்துத் தங்குகிறாள் என்று தோன்றிற்று. இல்லாவிட்டால் வெளியில் ஏன் சாப்பிடப் போக வேண்டும்? அவளைப் பற்றின என் அனுமானம் சரியானதாக இருக்கலாம் என்று அவன்



திருப்தியுடன் நினைத்துக் கொண்டான். நாளைக்கு அவளைத் திட்டவட்டமாகக் கேட்டு விட வேண்டும். அவள் நம் மூக்கை உடைக்கப் பார்த்தாலும்...

அவன் உடுப்பை மாற்றிக் கொள்ளும் போது, வீட்டின் உள் பகுதியிலிருந்து ஆங்கிலத்தில் செய்தி அறிக்கை கேட்டது. லைப்ரரியிலிருந்துதான் ஒலி வருகிறது என்கிற உத்தேசத்துடன் அவன் அறையை விட்டு வெளியே வந்து ரேழி விளக்கை ஏற்றி முன்னால் நடந்தான்.

லைப்ரரியின் கதவு லேசாகத் திறந்திருந்தது. அவன் மெல்ல கதவை இருமுறை தட்டினான்.

''கம் இன்!'' என்ற குரலைக் கேட்டு உள்ளே நுழைந்தான்.

''ஆ, வாருங்கள் பிரபு! சாப்பிட்டீர்களா?'' என்று உற்சாகமாக வரவேற்ற பாலசூர்யவுக்குப் பின்னால் சற்றுத் தள்ளி ஒரு நாற்காலியில் சீலியா அமர்ந்திருந்தாள். வியப்புக் கலந்த பார்வையை அவள் மேல் பதித்தபடியே அவன் உள்ளே நுழைந்தான்.

''ஆமாம்'' என்று அவருக்குப் பதில் சொல்லியபடி தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாதவனாய் அவளைக் கேட்டான்.

''நீங்கள் எப்பொழுது வீடு வந்து சேர்ந்தீர்கள்?''

அவள் புருவத்தை வளைத்தாள்.

''எங்கிருந்து?''



''வெளியிலிருந்து!''

''நான் வெளியே போயிருந்தேன் என்று உங்களுக்கு யார் சொன்னது?''

அவன் யாரோ தடுத்து நிறுத்தினாற் போல் தயங்கினான். விஷயத்தை மறைக்கப் பார்க்கிறாளா அல்லது நாம்தான் தவறு செய்தோமா?

''வேடிக்கைதான்'' என்றான் அவன் மெல்ல. ''அரை மணி நேரம் முன்பு புல்லர்ஸ் ரோடில் யாரோ இரண்டு பேர் ஒரு பெண்ணைத் துரத்திக் கொண்டு ஓடினார்கள். அந்தப் பெண் உங்களைப் போல் இருந்தாள்.''

அவள் பாலசூர்யாவைப் பார்த்துச் சிரிக்காமல் சொன்னாள்.

''கற்பனை இவருக்கு அதிகமாகவே இருக்கிறது. இவர் சரடுதான் திரிக்கப் போகிறார். உண்மையை எழுதப் போவதில்லை.''

டீ.வி. செய்தி அறிக்கையில் கவனமாயிருந்த பாலசூர்ய நிமிர்ந்து அவனைப் பார்த்துச் சிரித்தார்.

''சீலியா எங்கேயும் போகவில்லை. நீங்கள் நியூஸ் கேளுங்கள், வாருங்கள்.''

அவன் குழப்பத்துடன் அமர்ந்து கொண்டான்.

செய்தி அறிக்கை முழுவதும் இன்று நடந்த சம்பவத்தைப் பற்றின சுருள் படங்களாகக் கண்டனத்தோடு ஒலித்தது. தடை விதிக்கப்பட்ட ஜே.வி.பி. கட்சி ஆளாக இருக்கலாம் என்று சந்தேகம் தெரிவித்தது.

''உம் இவர்களுக்கு இதைத் தவிர வேறு எதுவும் சொல்லத் தெரியாது''... என்றார் விஜயபாலசூர்ய.

அப்பொழுதுதான் சீலியா அங்கில்லை என்பதை அவன் கவனித்தான்.

டீ.வி.யை அணைத்துவிட்டு, விஜயபாலசூர்ய அவனைப் பார்த்துச் சிரித்தார். இந்தச் சிரிப்பு அவரது முயற்சியால் வருவதில்லை; இவரது முக அமைப்பே அப்படி என்று அவன் நினைத்துக் கொண்டான்.

''என்ன கூராடங்குச் சட்டமிருந்தாலும் அமர்க்களங்கள் நடக்காமல் இருக்காது. சிங்களத் தரப்பில் இந்த உடன்படிக்கைக்கு நிறைய எதிர்ப்பு இருக்கிறது. பிரஸிடென்ட் ஜயவர்த்தன இஸ் அண்டர் டெரிபிள் பிரஷர்!''

''அப்படி இருக்கையில் இந்த ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டது ரொம்பத் தீரமான செயல்தான்'' என்றான் அவன்.

மறுபடியும் சிரிப்புடன் பதில்.

''அதற்கு அவர் தள்ளப்பட்டிருக்க வேண்டும். இவரேதான் ஒரு காலத்தில் எதிர்க்கட்சியில் இருக்கும் போது, தமிழர்களுக்கு எந்த விதச் சலுகையும் தரக்கூடாது என்ற கண்டனத்துடன் பாதயாத்திரை சென்றார்! இந்த அழகிய தீவில் இன்றைக்கு இருக்கும் இத்தனை பிரச்னைகளுக்கும் காரணம், இனவாதப் போர்வை போர்த்திய தவறான அரசியல்

வாஸந்தி

நோக்குதான். இன்று காலை நான் உங்களுக்குச் சொன்ன மாதிரி, இங்கு தேசிய எழுச்சியே ஏற்படவில்லை. ஆங்கிலேயரின் பிரித்து ஆளும் தந்திரமும் இதற்குப் பின்னணிக் காரணம். மேற்கத்திய கலாசாரத்துக்கு அதிகம் எதிர்ப்புக் காண்பிக்காத தமிழர் பகுதியில், நிறைய, தரமான ஆங்கிலப் பள்ளிகளை நிர்மாணித்தார்கள். பூமிவளம் இல்லாத அந்தப் பகுதியில் தங்கள் சுயபுத்தியை நம்பி வாழும் மக்களுக்கு, இதைவிட நல்ல வாய்ப்பு எங்கு கிடைக்கும்? சிக்கென்று பயன்படுத்திக் கொண்டார்கள். பட்டப் படிப்புப் படித்து வெளியேறினவர்களை ஆங்கிலேயர்கள் பெரிய பதவி அளித்துக் கொழும்பில் கௌரவித்தார்கள். வெகு சில சிங்களவர்களே ஆங்கிலப் படிப்புப் படித்து முன்னுக்கு வந்தார்கள். எந்தப் பெரிய பதவியிலும் தமிழர்கள். கிறிஸ்துவர்கள். பௌத்த—சிங்கள எழுச்சி இப்படித்தான் மேற்கத்திய கலாசாரத்தை எதிர்த்து. அதன் ஆதரவில் பொருளாதார முன்னேற்ற மடைந்து விட்டவர்களை எதிர்த்து ஆரம்பித்து. அதுவே அரசியல் பாத்திரந்தன்மையாகப் போய் விட்டது''.

அவர் நிதானமாகத் தமக்குள் பேசிக் கொள்பவர் போல் பேசினார்.

''அதனால்தான் இங்கு மதம் என்பது மக்களிடையே பெரிய சக்தியாக இருப்பதாக நான் சொன்னேன்!'' என்றான் பிரபு இடையில்.

''தங்கள் இனப் பெருமையை மற்றவர்களுக்கு எதிராகத் தூண்டிவிட இவர்களுக்கு மதம் ஒரு கருவியாயிற்று'' என்றார் அவர் தாம் ஓர் அந்நியர் போல். ''பௌத்த மதத்தைக் காப்பாற்ற புத்தபிரானே இந்தத் தீவைத் தேர்ந்தெடுத்ததாகவும் அதற்கு நடத்தும் போராட்டம் ஒரு தர்ம யுத்தமென்றும் பல அறிஞர்களும் தினசரிகளும் புத்த குருமார்களும் பாமரர்களிடையே எழுபதுகளில் தீவிரப் பிரசாரம் செய்தார்கள். பௌத்தரல்லாதார் மிலேச்சர்கள் என்று சொன்னார்கள்!''

''அதாவது இங்கிருக்கும் இந்துக்கள் உள்பட.''

''ஆமாம்.''

''எத்தனை வேடிக்கை! புத்தரே ஒரு இந்து. புத்த சமயமும் இந்து சமயத்திலிருந்து பிறந்தது என்று தெரியாதா?''

விஜயபாலசூர்ய கண்களை இடுக்கிக் கொண்டு சிரித்தார்.

''இங்கு அநேகம் பேருக்குத் தெரியாது. படித்தவர்கள் கூட ஒப்புக் கொள்ள மாட்டார்கள். மஹா வம்சமும் பிறகு எழுதப்பட்ட சரித்திரமும் எல்லார் பார்வையையும் மறைத்துவிட்டன. அது ஒரு பெரிய சோகம். அதனால்தான் இங்கு எந்த வர்க்கப் போராட்டமும் ஆரோக்கியமாக வளரவில்லை. இந்த ஜே. வி. பி. (ஜனதா விமுக்தி பெரமுன) கட்சியை எடுத்துக் கொள்ளுங்கள். வர்க்கப் போராட்டமாக இடதுசாரிக் கொள்கைகளுடன் வேலையில்லாச் சிங்கள கிராமப்புற இளைஞர்கள் ஆரம்பித்த போராட்டம். அவர்களைச் சமாதானப்படுத்தக் கல்வி நிலையில் தமிழர்களை அரசு ஒடுக்க ஆரம்பித்தது. முடிவு ஜே. வி. பி. வெகு விரைவில் தீவிர இனவெறி கொண்ட சமூக விரோதக் கும்பலாக மாறிவிட்டது. கண்டிப் பகுதியில் சிங்கள விவசாயிகளை மலையகத் தமிழருக்கு எதிராக மதப் பிரசாரம் முடுக்கிவிட்டது. இதற்கெல்லாம் அடிப்படை, பொருளாதாரமானாலும் எல்லா இனமும் சேர்ந்த ஒரு முற்போக்குச் சமுதாயப் புரட்சியாக வடிவமெடுக்க முடியாமல் இந்தப் பிற்போக்குச் சக்திகள் மக்களைப் பிரித்து விட்டன.''

அவர் சற்று நேரம் மௌனமாக இருந்தார். பிறகு மீண்டும் புன்னகையுடன் அவன் பக்கம் திரும்பினார்.

''இந்த உடன்படிக்கை சிங்களத் தீவிரவாதிகளை ரொம்பக் கோபப்படுத்தியிருக்கிறது. தமிழ்ப் போராளிக் கும்பல்கள் கடைப்பிடித்த பயங்கரவாதத்தினால் சாதாரண மக்களே அலுத்துப் போயிருக்கிறார்கள். இப்பொழுது அவர்கள் பார்வையில் வடக்கு, கிழக்குத் தமிழர் எல்லாருமே பயங்கரவாதிகள். அவர்களுக்கு அளவுக்கு மீறின சலுகைகள் வழங்கப்பட்டு விட்டன, இந்த உடன்படிக்கையால் என்று கோபம்! இப்பொழுது என்ன வேண்டுமானாலும் நடக்கலாம். ஜனாதிபதியின் உயிருக்கு ஆபத்து நேரலாம். அப்படி நேர்ந்தால் இரு தரப்புக்கும் பெரிய நஷ்டம்.''

மீண்டும் சீலியாவின் நினைவு வந்தது. எப்படி எங்கே நழுவினாள் என்று புரியவில்லை. அவள் தமிழ்ப் பெண்ணா என்று இவரிடம் கேட்க வேண்டும் என்கிற ஆவலை அவன் கட்டுப்படுத்திக் கொண்டான். அவன் கண்கள் நிச்சயம் பொய்க்காது. தெருவில் ஓடிய பெண் அவள்தான். இவரும் அவளது ரகசியத்தை மறைக்கிறார். ஏன்?

அவன் இயந்திரகதியில் சொன்னான்: ''தமிழர்களிடையே கூட இந்த உடன்படிக்கைக்கு முழு ஆதரவு இல்லையென்று நினைக்கிறேன்.''

''எந்த உடன்படிக்கையும் முழுத் திருப்தி அளிக்காது. இதை ஆதரிக்காதவர்கள் முட்டாள்கள். முதல் முறையாக அரசியல் சாசனத்தில் இனப் பிரிவுகளைப் பற்றியும் அவர்களது சுய நிர்ணயிப்பு உரிமையைப் பற்றியும் அங்கீகரிப்பு ஏற்பட்டிருக்கிறது. வடக்கு — கிழக்கு இணைப்பிற்கு அடிகோலியிருக்கிறது. இந்த ஜனநாயக வாய்ப்பைத் தமிழர்கள் நழுவ விட்டார்களானால் அவர்கள் முட்டாள்கள்.''

ஈசுவரன் சொன்னது திரும்பவும் நினைவுக்கு வந்தது. இவரிடம் அதைச் சொல்லலாமா வேண்டாமா? என்று அவன் யோசிக்கையில் அவர் எழுந்தார். சிரித்துக்கொண்டே அவன் தோளைத் தட்டினார்.

''சமுதாயச் சீர்குலைவுக்குச் சில முட்டாள்கள்தான் காரணம்!''

அவனுக்கு விடைகொடுப்பது போல் அவர் நின்றதால் அவன் எழுந்தான்.

''சீலியாவைக் கேள்; முட்டாள்களைப் பற்றிப் பிரசங்கமே செய்வாள்!''

''அவள் என்னுடன் பேசவதேயில்லை. என்னையும் முட்டாள் என்று நினைக்கிறாளோ, என்னவோ!''

அவர் வாய்விட்டுச் சிரித்தார்.

# ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

(Hire Purchase Financiers)

கீழ்கண்ட வட்டி விகிதங்களில்
பிக்சட் டெபாசிட்டுகள்
வரவேற்கப்படுகின்றன.

| 6 மாதங்கள் | 1 வருடம் | 2 வருடங்கள் | 3 வருடங்கள் |
|---|---|---|---|
| 15% | 19% | 20% | 21% |

தொடர்பு கொள்ளவும்

## ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

(FIRM)

39, நடேசன் தெரு (2-வது மாடி)
சிவா-விஷ்ணு கோயில் அருகில்
தி.நகர், சென்னை-600 017, போன் : 442218/445494

திருச்சி : 22, மதுரை ரோடு, (முதல் மாடி) ராஜா தியேட்டர் அருகில் திருச்சிராப்பள்ளி-620 008. போன் : 31376/33397

கோயமுத்தூர் : 666, ராஜா தெரு (முதல் மாடி) கோயமுத்தூர்-641001. போன் :34369.

மதுரை : 41, வடக்கு வெளி வீதி, (முதல் மாடி) மாடர்ன் லாட்ஜ், ஸ்டாப்பிங், மதுரை-625 001. போன் : 36004/34508.

பாண்டிச்சேரி : 11, செரு தெரு, (கனரா வங்கி எதிரில்) 2வது மாடி. பாண்டிச்சேரி-605 001. போன் : 26493/26471.

திருநெல்வேலி : 9-G, திலக் நகர், மதுரை ரோடு, திருநெல்வேலி-627 001. போன் :25785.

தஞ்சாவூர் : 2 & 3 முதல் மாடி, ஜி.ஏ. கனால் ரோடு, தஞ்சாவூர்-613 001. போன் : 21626/22286.

பெங்களூர் : 24/1-A, மார்கோஸா ரோடு, (10-வது கிராஸ்) மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003, போன் : 366971.

கும்பகோணம் : 12, கிழக்கு சாரங்கபாணி தெரு, கும்பகோணம்-612 001. போன் 22647.

திருவண்ணாமலை : 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601. போன் : 2483.

பட்டுக்கோட்டை : 121/B, தலையாரி தெரு, பட்டுக்கோட்டை-614 601. போன் : 453.

LOTUS/JF/108



''ஒளிமயமான வாழ்விற்கு ஒரு குழந்தைபோதுமேன்னு சொல்லிச் சொல்லிக் கொஞ்சுவீங்களே, அந்தப் பையன் இப்ப என்ன செய்யறான்?''

''சினிமாவில் 'லைட் பாயா' இருக்கான்!''

— கடலூர் கன்னியப்பன்.

---

''அவள் சிங்களப் பெண்ணா?''

''அவர் சற்று நின்று மீண்டும் பெரிதாகச் சிரித்தார்.

''அவள் ஒரு 'ஸ்ரீலங்கன்.' இனப் பிரிவுகளைப் பற்றி இந்த ஸ்தாபனம் ஆராய்ச்சி செய்கிறதே தவிர, யாரையும் பிரித்துப் பார்ப்பதில்லை. குட் நைட்!''

தன் அறையை நோக்கிச் செல்லும் போது முட்டாளாக்கப்பட்டாற்போல் இருந்தது. அவளைப் பற்றி இவரிடம் தூண்டித் துருவிக் கேட்பது அநாகரிகமாகப் படும் என்று தோன்றிற்று.

அடுத்த இரண்டு மூன்று நாட்களுக்குச் சில்வியா கண்ணிலேயே தென்படவில்லை. அவனே காலையிலிருந்து மாலை வரை வெளியே அலைந்து கொண்டிருந்ததால், விஜயபாலசூர்யவையும் பார்க்க முடியவில்லை. கடந்த மூன்று நாட்களாக ஊரடங்குச் சட்டத்தை மீறி, கொழும்பிலும் தெற்கிலும் கலவரங்கள் நடந்து கொண்டிருந்ததால் அவனுக்கு அலைந்து போட்டோ பிடித்து இரவில் ரிப்போர்ட்டை டைப் அடிக்க வேண்டிய வேலை நிறைய இருந்தது. ஏக பஸ்கள் எரிக்கப்பட்டன. அங்கங்கே குண்டு வெடிகள்; அரசியல் கொலைகள்; ஏகமாய்க் கைதுகள்! அரசுக்கு இது மிகப் பெரிய சோதனைக் காலம் என்று அவன் நினைத்துக் கொண்டான். இத்தனை சோதனைகள் இருக்கும் என்று தெரிந்தும், அரசு இந்த உடன்படிக்கைக்குச் சம்மதித்திருந்தது புதிராக இருந்தது. உடனடியாக வடக்கு கிழக்குப் பகுதிகளில் போர் நிறுத்தம் செய்யப்பட்டிருந்தது. பொது ஜனங்கள் இப்பொழுது தைரியமாக அங்கு வெளியில் வர ஆரம்பித்திருப்பதாகச் செய்திகள் கூறின. இரண்டு மூன்று நாட்களில் யாழ்ப்பாணத்துக்கு ரயில் போக்குவரத்துத் துவங்கி விடும் என்றார்கள். எப்படியோ அங்கே அமைதி வந்துவிடக் கூடிய அறிகுறி இங்கே நடக்கும் கலவரத்துக்கிடையேயும் தெரிந்தது.

ஆனால் போராளிகள் இன்னும் ஆயுதச் சரண் செய்துவிடவில்லை என்கிற விஷயமும் அன்று சாந்தி விஹாரில் சந்தித்த ஈசுவரன் சொன்ன அபிப்பிராயமும் நினைவுக்கு வரும் போதெல்லாம் மெல்லிய கவலை அரித்தது. இந்த உடன்படிக்கை மட்டும் வெற்றியடையுமானால், ஜயசீலன் யாழ்ப்பாணத்துக்குத் திரும்புவான். அவனைத் தேடிப் பிடித்துச் சில்வியா இன்னும் உயிரோடு இருக்கிறாள் என்று...

இன்னும் தெரியாது அவள்தான் ஜயசீலனின் சில்வியாவா என்று. நேற்று விஜயபாலசூர்யவைத் தேடிக் கொண்டு போன போது அவர் திரிகோணமலைக்குப் போயிருப்பதாக ஆள் சொன்னான். அவளும் அவருடன் போயிருக்கலாம்.

அன்று அறைக்குப் போவதற்கு முன் 'கால்' வீதிக்குச் சென்று கடற்கரைச் சாலையில் நின்றான். அமைதி காக்கும் இந்திய ராணுவக் கப்பல்கள் இரண்டு கண்காணித்துக் கொண்டு நின்றன, கொழும்பில் இருக்கும் இந்தியப் பிரஜைகளுக்கு ஆபத்து வரலாம் என்று.

அந்தக் கப்பல்களைப் பார்த்தபடி ஒரு புத்தபிட்சு உட்கார்ந்திருந்தார். அவருடன் பேச்சுக் கொடுத்து, அவன் ஒரு போட்டோ பிடித்தான். அவன் இந்தியன் என்று தெரிந்ததும் அவர் ஆங்கிலத்தில் படபடத்தார்.

''இந்தியாவின் ஆக்கிரமிப்பு மீண்டும் ஆரம்பித்துவிட்டது.. இந்தக் கப்பல்கள் இங்கு நிற்பதற்கு வேறு என்ன அர்த்தம்?''

அவன் விளங்காதவனைப் போல் நின்றான். ''சோழர் காலத்துப் படையெடுப்பை நாங்கள் மறக்க மாட்டோம். இந்தியா பெரிய நாடாக இருக்கலாம். ஆனால் நாங்கள் சும்மா இருக்க மாட்டோம். பராக்கிரமசாலியான தமிழ் மன்னன் எல்லாளனை எங்கள் துட்டகமுனு முறியடித்து விரட்டினான் தெரியுமா?''

அவனுக்குச் சிரிப்பு வந்தது. ஏதோ சொல்ல வாயைத் திறந்தபோது,

''இவன் ஓர் இந்தியன்'' என்றார் அவர் யாரிடமோ.

அவன் சரேலென்று திரும்பியபோது, மூன்று இளைஞர்கள் அவனை நோக்கி வந்தார்கள்.

புலன்கள் விழிப்படைந்து அவன் கண்மண் தெரியாமல் ஓட ஆரம்பித்தான். குறுக்குத் தெருக்கள் கூட இல்லாத அந்தச் சாலையில் நீள ஓடி எப்படியோ அன்று இரவு உயிர் தப்பி அறைக்கு வந்து சேர்ந்தபோது, உடம்பும் மனமும் குலைந்து போயிருந்தன. அறையில் தண்ணீர் ஜக்கில் நீர் இல்லை. அவன் சமையலறையை நோக்கி நடக்கையில் 'இந்தப் போஸ்டிங் எனக்குப் போதும். தில்லி திரும்புகிறேன்' என்று மல்லேறாத் திராவுக்கு மனத்துக்குள் தந்தியடித்தான்.

மெலிதாகப் பாட்டோசை கேட்ட மாதிரி இருந்தது. அவன் தயங்கி நின்றான். அந்தகார மௌனத்தில் தெளிவாகக் கேட்டது. தமிழில் பாட்டு.

(தொடரும்)



* சாமிநாத சர்மாவுடன் பெ. சு. மணி.

# 83 ஆண்டுகள் வாழ்ந்து 80 நூல்களை எழுதியவர்!

தமது எண்பத்து மூன்று ஆண்டு வாழ்க்கையில் எண்பது நூல்களை எழுதிய ஒருவர் உண்டு என்றால் அது வெ. சாமிநாத சர்மாவாக மட்டுமே இருக்கக் கூடும். இந்நாட்களில் மாதமொன்றாக எழுதிக் குவிக்கப்படுகிற நாவல்களைப் போன்றதல்ல அவரது படைப்புக்கள். ஏராளமான அறிவியல் நூல்களைத் தமிழுக்குத் தந்ததுதான் அவருடைய தனிச் சிறப்பு. தவிர கார்ல் மார்க்ஸ், ரூஸோ போன்ற உலக அறிஞர்களின் கருத்துக்களையும் வாழ்க்கை வரலாறுகளையும் தமிழிலே தந்தார்.

அமரர் 'கல்கி' அவர்களுக்கும் சாமிநாத சர்மாவுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. திரு. வி. க. நடத்தி வந்த நவசக்தி பத்திரிகையில் சேர்ந்த கிருஷ்ணமூர்த்தி, அந்தக் காரியாலயத்தில் நுழைந்த முதல் நாள் சந்தித்த சகா சாமிநாத சர்மா. பேனு கட்டையில் ஸ்டீல் நிப்பைப் பொருத்தி, நூல் கயிறு போட்டுக் கட்டி, மையில் தோய்த்து எழுதும் கலையை சாமிநாத சர்மாவிடம்தான் கற்றார் 'கல்கி'! பிற்காலத்தில் கிருஷ்ணமூர்த்தியைப் போலவே சர்மாவும் நவசக்தியை விட்டுப் பிரிந்தார். பர்மா சென்றார். ரங்கூனில் 'ஜோதி' என்ற அருமையான இலக்கிய மாத இதழை நடத்தினார். உலகப் போர் உக்கிரமடைந்த போது, கால்நடையாக கல்கத்தா வந்து சேர்ந்து, அங்கிருந்து சென்னையை வந்தடைந்தார். 'கல்கி' அவருடைய அனுபவங்களைக் கேட்டறிந்தார். அதன் பலன் "ரங்கூன் மாப்பிள்ளை" என்ற சிறுகதையாக மலர்ந்தது.

'கல்கி'யின் அத்தியந்த தோழருள் ஒருவராக விளங்கிய சாமிநாத சர்மா பற்றி இந்த ஆண்டு 'கல்கி' நினைவுச் சொற்பொழிவு, சென்னைப் பல்கலைக்கழகத்தில் நடந்ததானது மிகவும் பொருத்தமானது என்பதோடு, பாராட்டுக்குரியது. அதைவிடப் பாராட்டுக்குரியது ஒன்று உண்டென்றால் அது, இந்தச் சொற்பொழிவை நிகழ்த்த பெ. சு. மணியைத் தேர்ந்தெடுத்ததுதான்! பெ. சு. மணி தமிழ்ப் பண்டிதரோ, பட்டதாரியோ அல்லர். மத்திய அரசில் ஓர் ஊழியர், அவ்வளவே. ஆயினும் என்ன? அவர் தமிழ்ப் பற்றும் தேச பக்தியும் மிகுந்தவர். தேச பக்தர்களைத் தேடித் தேடிச் சென்று பழைய தேசிய வரலாற்றுச் செய்திகளைச் சேகரிப்பதிலும், இது தொடர்பான பழைமையான நூல்களை வாங்குவதிலும் தமது ஓய்வு நேரத்தையும் கைப் பணத்தையும் செலவழிக்கும் உத்தமர். அதாவது இந்நாளைய அரசியல்வாதிகளின் கணக்குப்படி ஓர் அசடு! இந்த அசட்டுத்தனத்தின் ஓர் அம்சமாக அவர் சாமிநாத சர்மாவிடமும் அவரது இலக்கியப் பணியிலும் அளவு கடந்த ஈடுபாடு கொண்டு ஏராளமான செய்திகளைச் சேகரித்து மூன்று நாட்கள் அவரைப் பற்றிப் பல்வேறு கோணங்களில் அற்புதமாகப் பேசினார்.

சாமிநாத சர்மா அறிவியல் நூல்கள் மட்டுமின்றி கதைகளும் நாடகங்களும் கூட எழுதினார் என்பதை நினைவூட்டினார் பெ. சு. மணி. அவரது 'பாணபுரத்து வீரன்' என்ற நாடகம்தான் 'தேச பக்தி' என்ற மாற்றுத் தலைப்பில் 'அவ்வை' சண்முகத்தால் பல ஆண்டுகளுக்கு அவ்வப்போது நடத்தப்பட்டுத் தமிழ் மக்களுக்குத் தேச பக்தி ஊட்டி வந்தது.

சர்மாவின் வாழ்க்கையில் அவரது பதினேழாம் வயதில் நடந்த ஒரு சுவையான சம்பவத்தையும் கூறினார் பெ. சு. மணி. ஓர் உயர்நிலைப் பள்ளியில் தமிழ் என்னும் பொருள் பற்றி உரையாற்றினார். இதனை நிர்வாகிகள் அந்நாளையத் தமிழேடுகளில், 'சாமிநாதய்யர் 'தமிழ்' என்னும் பொருளில் பேசுவார்' என்று விளம்பரப்படுத்தி விட்டார்கள். மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாத அய்யர்தான் பேசப் போகிறார் என்றெண்ணி அந்நாளையத் தமிழ் அறிஞர்கள், பண்டிதர்கள் எல்லோரும் பெருந்திரளாகக் கூடி விட்டனர்! பார்த்தால், பதினேழு வயது வாலிபன் மேடை ஏறினான்! அவர்களுக்கு ஏற்பட்ட மிகப் பெரிய ஏமாற்றம், பையன் பேச ஆரம்பித்ததுமே படிப்படியாகக் குறையத் தொடங்கி, கடைசியில் பாராட்டாகவே உருமாறி விட்டது! இளம் சாமிநாத அய்யரும் பெயர்க் குழப்பத்தை எதிர்காலத்திலே தவிர்க்க எண்ணி சாமிநாத சர்மா ஆனார்!

நூல் வடிவம் பெறத் தகுதியுடைய பெ. சு. மணியின் மூன்று நாள் பேச்சைக் கேட்ட பிறகு அவர் நம் மதிப்பில் 'பேசு, மணி!' ஆனார்!

— எஸ். வி. எஸ்.

**"யூரேகா ஃபோர்ப்ஸ் சேல்ஸ்.மேன் தான் எவ்வளவு நல்லவர். என் வீட்டில், சுத்தம் மற்றும் சுகாதாரத்திற்கு நவீன முறைகளை அறிமுகப்படுத்திய இனிய நண்பர் அவர்தான்"**

திருமதி. அர்ச்சனா சம்பாலி, பம்பாய்





**'அவன் (சுப்ரமண்யராஜு) எழுதினுல் என்னை விட நன்ருக எழுதுவான். ஆனுல் அதிகம் எழுத மாட்டேனென்கிருன்...'**

**— இது சுப்ரமண்யராஜு பற்றி பாலகுமாரன் ஒருமுறை சொன்னது. அப்படிப்பட்ட சுப்ரமண்யராஜு கல்கிக்காகவே எழுதிய கதைதான் இது. அவருடைய கடைசிக் கதையும் இதுவே....**

''காரை ஆபீஸ் வாசலிலேயே நிறுத்துப்பா! உள்ளே போக வேண்டாம்!''

''சரி சார்!''

கார் ஆபீஸ் வாசலில் ஓர் ஓரமாக நின்றது. கதவைத் திறந்து இறங்கிக் கொண்டார் மோகன ரங்கம். பின் சீட்டில் இருந்து ஆபீஸ் பைல்கள் வைக்கும் சிறிய சூட்கேஸை எடுத்துக் கொண்டு கதவைச் சாத்தினுர்.

''நேரே அடையாறுக்குப் போ! அங்கே அவங்க எங்கியோ போகணும்னுங்க! போயிட்டுச் சாப்பாட்டு நேரத்துக்குள்ளே வந்துடு!''

டிரைவர் தலையசைத்தான். அவன் சிரிப்பது மாதிரி கூட இருந்தது. அடையாறில் இன்னொரு வீடு இருக்கிறது. அங்கே இன்னொரு பெண்டாட்டி இருக்கிருள். பெண்டாட்டி கூட இல்லை. ஆசை நாயகி! ஆனுல் அந்தப் பெயரை அவள் ஒப்புக் கொள்ள மாட்டாள். தாலி கட்டவில்லையே ஒழிய மற்ற எல்லா விதத்திலும் மனைவியின் அந்தஸ்துதான். இந்த வயதில் போய் இப்படி ஓர் உறவில் மாட்டிக் கொண்டிருக்க வேண்டாம். இப்போதே ஆபீஸில் பாதிப் பேருக்கு மேல் பேச ஆரம்பித்திருக்கிருர்கள். மீதிப் பேர் பயந்து கொண்டு பேசாமல் இருக்கிருர்கள். இன்னும் பெரிய வீட்டில் ஏதும் எரிமலை வெடிக்கவில்லை. அந்த நாளைப் பயத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிருர்.

ஆபீஸில் தம் அறைக்குள் நுழைந்தவுடன் ஏ.சி.யின் குளுமை இதமாய் இருந்தது. டையை ஒரு தடவை தளர்த்திப் பின் இறுக்கிக் கொண்டார். இன்று செய்ய வேண்டிய வேலைகள் பற்றிய குறிப்பை செக்ரட்டரி ஒரு காகிதத்தில் அழகாய் டைப் அடித்து வைத்திருந்தாள். அவற்றை ஒரு தடவை படித்து முடித்த போது இண்டர்காம் டெலிபோன் ஒலித்தது.

''ஹலோ! குட்மார்னிங்! மோகனரங்கம் ஹியர்!''

''குட்மார்னிங் சார்! உங்களை எம்.டி. கூப்பிடுகிருர்.''

மறுமுனையில் போன் வைக்கப்பட்டு விட்டது. எம்.டி.யின் அந்தரங்கச் செயலாளன். அதற்கு மேல் பேச மாட்டான். எம். பி. ஏ. படிப்பு. இந்தச் சின்ன வயதிலேயே இவ்வளவு ஆட்டம் கூடாது. ஒரு முறை முன் நெற்றி வியர்த்தது. துடைத்துக் கொண்டார். எம்.டி.யின் அறை மூன்ருவது மாடியில். லிப்ட் பட்டனை அழுத்தி விட்டுக் காத்திருந்தார். லிப்ட் வருவதற்குள் ஒரு முறை கவசம் சொல்லி விடலாம். மனதுக்குள் சொல்ல ஆரம்பித்தார். லிப்ட் வந்தது. இவரை அழைத்துக் கொண்டு கதவைத் தானுகவே சாத்திக் கொண்டது. மோகன ரங்கம் இன்னொரு தடவை கவசம் சொல்ல ஆரம்பித்துத் தோற்றுப் போனுர்.

மூன்ருவது மாடியில் எம். டி. அறையின் வாசலில் உட்கார்ந்திருந்த பியூன் சம்பந்தம் இவரைப் பார்த்தவுடன் சிரித்துக் கொண்டே 'குட்மார்னிங் சார்' என்று இரைந்து சொன்ஞன். அதற்கு அர்த்தம் இருக்கிறது. மாலையில் ஆபீஸ் விடும் நேரத்துக்கு அறைக்கு வருவான். ஐந்து ரூபாய் தர வேண்டும். அவன் எதற்குக் கேட்கிருன், தான் எதற்குக் கொடுக்கிருேம் என்பது மட்டும் இன்றுவரை புரியவில்லை.

''என்ன? எம்.டி. எப்படி இருக்கார்?''

''ஃபர்ஸ்ட் க்ளாஸ் மூட் சார்!'' என்ருன் சம்பந்தம். மறுபடி உரக்கச் சிரித்தான். சிரிக்காதே! இப்படி உரக்கச் சிரிக்காதே! நாளையில் இருந்து இன்னும் ஐந்து ரூபாய் அதிகமாய் வேண்டுமானுல் வாங்கிக் கொள்! ஆனுல் இப்படிச் சிரிக்காதே!

எம். டி. பல் குத்திக் கொண்டிருந்தார். காலையில் இட்டிலிக்குத் தொட்டுக் கொண்ட மிளகாய்ப் பொடியில் ஒரு சிறு பருப்பு எங்கோ மாட்டிக் கொண்டு வெகு நேரமாய்த் தொல்லை கொடுக்கிறது. அதை ஒரு சவால் போல் ஏற்றுக் கொண்டு எல்லா விதங்களிலும் முயன்று பார்த்து விட்டார். மோகன ரங்கத்தை உட்காரச் சொல்லி விட்டு மறுபடி பல்லிடுக்கில் தேட ஆரம்பித்தார். அதன் மூலம் கொஞ்சம் நேரத்தைக் கடக்கலாம். எதிராளியை அளவும் பார்க்கலாம். எப்படிப் பாய்வது, எங்கிருந்து பாய்வது என்று பதுங்கிப் பார்க்கலாம். எதிரே இருப்பவன் பலி ஆடு போல் நெளிவதை ரசிக்கலாம். எப்படி இருந்தாலும் இனி கடினமான பொருட்களை உண்ணுதல் கூடாது என்று தீர்மானம் பண்ணிக் கொண்டார்.

''சொல்லுய்யா!'' என்ருர்.

மோகன் ரங்கம் லேசாகச் சிரித்தார். இதற்குப் பதில் ஏதும் சொல்லக் கூடாது என்பது அவர் அனுபவம் கற்றுத் தந்த பாடம்.

''நார்த்லெ சேல்ஸ் இந்த மாசம் எப்படி இருக்கு?''

''பட்ஜெட்டைத் தாண்டிட்டோம் சார்!''

''சவுத்லெ?''

எம். டி. பாயத் தயாராகி விட்டார். இனி

உஷாராக இருக்க வேண்டும்.

"சொல்லுய்யா!"

"கொஞ்சம் கம்மிதான் சார்!"

"கொஞ்சம்னு?"

"பதினேழு பர்ஸண்ட் சார்!"

"பதினேழு பர்ஸண்ட் என்பது உனக்குக் கொஞ்சம் கம்மியா?"

"சாரி! சார்!"

"காரணம்?"

"ஸ்டாக் இல்லே சார்!"

"எங்கே?"

"இதோ இப்ப சொல்றேன் சார்!" மோகன ரங்கம் ஃபைலை எடுத்தார்.

"ஃபைல் எதுக்குய்யா? நான் சொல்றேன். எர்ணாகுளத்துல இல்ல. சரியா?"

"ஆமாம் சார்!"

"இதுக்குப் பெரிசா ஃபைலைப் பார்க்கணுமாக்கும்? ஸ்டாக் மூவ்மெண்ட்ஸ் பாத்தியா?"

"பார்த்தேன் சார். நேத்துக்கூட ஒரு ரிமைண்டர் குடுத்தேன் சார்!"

மறுபடி போனை எடுத்து, "அந்த ஸ்டாக் பார்த்த சாரதியை வரச் சொல்லுய்யா!" என்றார்.

**பா**ர்த்தசாரதி ஸ்டாக் ரெஜிஸ்டரை மூன்றாவது தடவையாகப் பார்த்துக் கொண்டார். எம். டி. கூப்பிடுகிறார்; இது எப்போதாவது நேரும் சம்பவம். எங்கேயோ தவறு நேர்ந்து விட்டது. எல்லாம் சரியாக இருந்தால் என்னை யாரும் கூப்பிட மாட்டார்கள். ஒரு சிறு துளி பிசகினாலும்கூடத் தலை உருள ஆரம்பித்து விடும். என் தலை மட்டும் தான் எல்லாருக்கும் உருட்ட வசதி. இப்போது ஆபீஸில் நிலைமை சரியில்லை. எதைக் காட்டி வெளியே அனுப்பலாம் என்று காத்துக் கொண்டிருக்கிறார்கள். 'நீயாப் போயிடறியா? இல்லே நாங்க அனுப்பிடவா?' வாயைக் கட்டி வயிற்றைக் கட்டி முப்பது வருஷங்களைத் தள்ளியாகி விட்டது. இந்த



முப்பது வருஷங்களில் இரண்டு பெண்களுக்குக் கல்யாணம் பண்ணிக் கரையேற்றியாகி விட்டது. இன்னும் ஒருத்திதான் இருக்கிறாள். குரோம்பேட்டையில் கஷ்டப்பட்டுக் கட்டின வீட்டுக்குக் கூட சொஸைட்டி கடன் இந்த வருடம் முடிந்து விடுகிறது. ஆபீஸ் வேலை இன்னும் இரண்டு வருஷங்கள்தான் பாக்கியிருக்கிறது. வருகிற பணத்தில் பாதியைக் கல்யாணத்துக்கும் மீதியைக் கடைசிக் காலத்துக்கும் வைத்துக் கொள்ள வேண்டும். வீட்டை இரண்டு போர்ஷனாக்கி ஒன்றில் ஓரமாய் ஒதுங்கிக் கொள்ளலாம். ஒரேயொரு பிள்ளை இருந்திருந்தால் அவன் நிழலில் கொஞ்ச காலம் இளைப்பாறலாம். அதுவும் இல்லை. பெருமாள் கொடுத்தது இவ்வளவுதான். இது போதும்; இதுவும் இல்லாமல் எவ்வளவோ பேர் அல்லாடுகிறார்கள்.'

"வா சார்! எம்.டி. காத்துக்கிட்டு இருக்கார்! சீக்கிரம் உள்ளே போ!" என்று கதவைத் திறந்து அவரை உள்ளே அனுப்பினான் சம்பந்தம்.

உள்ளே எம்.டி.க்கு எதிரில் மோகனரங்கம் உட்கார்ந்திருப்பதைப் பார்த்த உடனேயே பார்த்தசாரதிக்கு வயிறு சங்கடம் பண்ணியது. இவன் ஏதோ போட்டுக் கொடுத்திருக்கிறான். பவ்யமாய்ப் போய் எதிரில் உட்கார்ந்தார்.

"என்னய்யா! எர்ணாகுளத்துல ஸ்டாக் இல்லியாமே?"

"ஆமாம்; சார்!"

"ஏன் இல்லை?"

"இன்னிக்குப் போறது சார்!"

"நான் சொன்ன பிறகா?"

"இல்லே; சார்! பதினேழாம் தேதியே ஷெட்யூல் போட்டாச்சு சார்!"

"என்ன ஷெட்யூல்! என்ன மண்ணாங்கட்டி! எங்கியாவது கூடுவாஞ்சேரியில போய்ப் பார்த்தா பத்து லட்ச ரூபாய்க்கு ஸ்டாக் இருக்கும்! விக்கிற இடத்துல ஒரு திருகாணி கூட இருக்காது! அப்படித்தானே? நீங்கள்ளாம் என்ன கிழிக்கிறீங்களோ?"

பார்த்தசாரதி பதில் சொல்ல நினைத்துப் பின் அடக்கிக் கொண்டார். ஒரு இரண்டு நிமிட மௌனம் இரண்டு வருஷம் போல், உயிரே போய் விடும் போல் இருந்தது.

"சரி; நீங்க என்ன பண்ணுவீங்களோ தெரியாது! நாளைக்குக் காலையில எர்ணாகுளத்துல ஸ்டாக் இருக்கணும் புரிஞ்சுதா?"

இரண்டு பேரும் ஒரே சமயத்தில் தலை ஆட்டினார்கள்.

"நல்லா தலையை ஆட்டறீங்க! உங்களையெல்லாம் நம்பி இவ்வளவு பெரிய தொழிற்சாலை, இவ்வளவு பெரிய ஆபீஸ், அதுல ஏகப்பட்ட பணம் எல்லாம் போட்டு நான் நாய் மாதிரி சுத்திச் சுத்தி வந்து காவல் காக்கணும். நீங்க தலையை ஆட்டுங்க!"

மறுபடியும் மௌனம்.

"சரி; நீங்க போகலாம்!"



"இன்று பத்திரிகைச் சுதந்திரம் இல்லையென்று வாய் கிழியப் பேசுபவர்கள், அன்று வெள்ளைக்காரன் வெறும் சுதந்திரத்தை மட்டும் நம்மிடம் கொடுத்து விட்டுப் போனபோது அதைக் கேட்காமல் இவர்கள் எங்கே போனார்கள் என்று நான் கேட்கிறேன்!"

— கடுவை கோபால்சாமி.

மோகனரங்கமும், பார்த்தசாரதியும் வெளியே வருவதைப் பார்த்தவுடன் விரைப்பாக எழுந்து நின்று சல்யூட் அடித்தான் பியூன் சம்பந்தம். பார்த்த சாரதி மட்டும் பதிலுக்குச் சிரித்தார். இன்று மாலை இவரையும் பார்க்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டான்.

சம்பந்தம் தன் இள வயதில் அனாதையாய் முதலாளியின் பங்களாவில் எடுபிடி வேலைக்குச் சேர்ந்த பையன். சுறுசுறுப்பாய் வேலை பார்த்து எல்லார் கவனத்தையும் ஈர்த்தவன். இப்போது ஆபீஸில் அவருக்கே பியூன்!

அவரைப் பார்க்க வருகிறவர்களுக்கெல்லாம் கதவு திறந்து வழி விடுபவன். அவ்வப்போது முதலாளியின் 'மூட்' பற்றி மற்றவர்களுக்கு ஆலோசனை வழங்குவான். சம்பந்தத்துக்கு ஒரு பெரிய குறை உண்டு. இங்கு வந்துவிட்டுப் போகிற சேல்ஸ் மேனேஜரில் இருந்து கேஷியர், கிளார்க் வரை எல்லாருக்கும் வாழ்க்கை சுவாரஸ்யமாக இருப்பது போலவும், தான் மட்டும் வீட்டுக்குப் போய்த் தனியாக வானத்தை வெறிக்கப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டிய நிர்ப்பந்தம் இருப்பது போலவும் நினைத்துக் கொள்வான். தனியாகவே வளர்ந்து விட்ட அவனை யாரும் திருமணத்துக்கு மட்டும் சிபாரிசு செய்யவில்லை. முதலில் அது பெரிதாகத் தெரியவில்லையாயினும் இப்போது தெரிந்தது. வீட்டுக்குப் போனால் முகம் கழுவ, வெந்நீர் வைத்துக் குளிப்பாட்ட, கொஞ்சம் சோறு போட.... கடவுளே! எத்தனை நாள் அந்தத் தெருமுனைக் கடை பரோட்டாவையும், குருமாவையும் சாப்பிட்டுக் கொண்டிருப்பது! மாலை நேர இருள் கவிய ஆரம்பித்து விட்டால் சொல்லி வைத்தாற் போல் எங்கிருந்தோ அந்தப் பாழாய்ப் போன சாராய ஆசை வந்து விடுகிறது. கடைகளை மூடி விட்டாலும் ஆசையை மூட முடியவில்லை. கள்ளச் சாராயம் கதிர்வேலுவிடம் கிடைக்கும். அதற்குக் காசு வேண்டும். காசுக்குச் சலாம் போட வேண்டும். உலகம் முழுக்கத் தன் குடும்பத்தோடு கோவிலுக்கும், சினிமாவுக்கும், திருவிழாவுக்கும், விருந்துக்கும், வீட்டிற்கும், வீட்டில் சாப்பாட்டுக்கும் போய்க் கொண்டிருக்கும் போது தான் மட்டும் யாரோ ஒரு கதிர்வேலுவின் வீட்டுக்குப் பின்னால் கள்ளச் சாராயம் குடித்து விட்டுத் தள்ளாடிக் கொண்டே வீடு வந்து விழுந்து மறுநாள் விடிவதற்காகக் காத்திருக்க வேண்டும். காலையில் எழுந்தவுடன் முகம் கழுவிப் பல் துலக்கி முடித்தவுடன் காத்திருந்ததே போல அந்த டீக்கடைப் பையன் சூடான டீயுடன் வருவான். தன்னைப் பார்த்துச் சிரிப்பான். ஒவ்வொரு நாளும் அவனுக்குப் பத்து பைசா தருவான். நாளை ஒரு இரண்டு ரூபாயாகத் தர வேண்டும். இப்போது புரிந்து விட்டது. தான் அந்தப் பையனுக்காகத்தான் காத்திருக்கிறோம். தனக்கும் ஏதோ ஒன்று பிடித்துக் கொள்ள இருக்கிறது. நாளை அவன் வராவிட்டால் வேறு ஒரு பையன் வருவான். அதனால் என்ன, யாராவது ஒரு அனாதைப் பையன் வருவான். அவனுக்கு நான் காசு தருவேன். கூடவே கொஞ்சம் அன்பும் தருவேன்....

எம்.டி.யின் அறையில் இருந்து மணி அடித்தது. சம்பந்தம் தன்னை விடுவித்துக் கொண்டு அறைக் கதவைத் திறந்து உள்ளே நுழைந்தான்.

"பரசுராமனைக் கூப்பிடுப்பா!"

"எஸ், சார்!"

பரசுராமன் என்கிற ஆர். பி. ராமன் தன் கலையாத தலையைச் சரி செய்து கொண்டான். அவன் எதிரே மேஜை மேல் நிறைய பைல்கள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. ஒவ்வொன்றையும் நிதானமாய்ப் படித்துக் குறிப்பெடுத்துக் கொள்ள வேண்டும். முக்கியமானவற்றை மட்டும் மூளையில் பதிவு செய்து கொள்ள வேண்டும். இங்கு முக்கியமானவை என்பது எம்.டி. முக்கியமானவை என்று கருதுவது. அதை மீட்டிங் சமயத்தில் சரியான தருணத்தில் உணர்த்த வேண்டும். பரசுராமன் கவனமாகவும், எச்சரிக்கையாகவும் செயல்படும் ஒரு எம். பி. ஏ. பட்டதாரி. ரொம்பவும் கஷ்டப்பட்டு மேலே வந்தவன். பரசுராமன் என்கிற பெயர் கர்நாடகமாய் இருப்பதாக நினைத்து ஆர். பி. ராமன் என்று வெகு நாட்களுக்கு முன்பாகவே சுருக்கிக் கொண்டான். எம்.பி.ஏ. முடித்தவுடன் அதுவும் ஆர்.பி. ராம் என்று சுருங்கி விட்டது. அந்தப் படிப்புதான் பெரிய இடத்தில் பெண் தேடிக் கொடுத்தது. அதன் மூலமாக உயர்ந்த இடத்தில் உத்தியோகம் வாங்கிக் கொடுத்தது.

இந்த ஆபீஸில் யாரையும் அவன் தன் அருகில் நெருங்கவிடுவதில்லை. அதுவே கொஞ்சம் மதிப்பை அதிகமாக்கிக் காட்டியது. சேர்ந்த இரண்டு வருடத்திலேயே எம்.டி.யின் நன்மதிப்பைப் பெற்று விட்டான். தான் டீக்காக உடுத்திக் கொண்டு ஒரு வேலையும் செய்யாமல் துபாய்யாக இருப்பதாக மற்றவர்கள் நினைப்பது அவனுக்குத் தெரியும். ஆனால் தன் வேலை எவ்வளவு முக்கியம் என்பது அவனுக்குத் தெரியும். மற்றவர்கள் அபிப்ராயத்தைப் பற்றி அவன் என்றுமே கவலைப்பட்டது இல்லை. அவனுடைய கவலையெல்லாம் ஒன்றே ஒன்றுதான்.



''பத்து ரூபாய் கள்ள நோட்டு அச்சடிச்சப்போ கண்டுபிடிக்காதவங்க இப்போ எப்படியோ கண்டுபிடிச்சுட்டாங்களே!''

''இப்போ என்ன அச்சடிச்சீங்க?''

''ஏழு ரூபாய்க் கள்ள நோட்டு!''

— கடுவை கோபால்சாமி.

---

இவ்வளவு கை நிறையச் சம்பளம் வாங்கியும், கார், வீடு எல்லாம் இருந்தும் அவன் மனைவி அவனைத் துளிக்கூட மதிப்பதில்லை. ஒரு புழுவைப் பார்ப்பது போல் அவனைப் பார்க்கிறாள். இதற்கு ஏதாவது செய்ய வேண்டும். அவன் சில சமயங்களில் கொஞ்சம் சொல்லிப் பார்த்தும் அவள் மசிவதாய் இல்லை....

''சார்! எம்.டி. கூப்பிடுகிறார்!'' என்றான் சம்பந்தம்.

''குட்மார்னிங் சார்!'' என்று சொல்லி விட்டு எம்.டி. மேஜைக்கு முன்னால் உட்கார்ந்தான் பரசுராமன்.

''இன்னிக்குக் கொஞ்சம் சீக்கிரம் போகலாம்னு இருக்கேன். எனக்கு ஏதாவது அப்பாயின்ட்மெண்ட் இருக்கா?''

''ஆமாம் சார்!''

''யாரு?''

''யூனியன் செக்ரட்டரி பெருமாள் சார்!''

''எப்ப?''

''இப்ப பன்னிரண்டு மணிக்கு சார்!''

''மை காட்! அவன் உசிரை எடுத்துடுவானே! நீ ஏன் முன்னாலேயே சொல்லலே?''

''அப்பாயின்மெண்ட்ஸ் பைல்ல இருக்கு சார்!''

''ஃபைல்ல இருந்தா போறுமா? காலைல வந்தவுடனே நீ சொல்ல வேணாமா?''

''நீங்க பிஸியா இருந்திங்க சார்!''

''என்ன பிஸி? எதுக்கு இன்டர்காம் டெலிபோன் இருக்கு? அதுல கூப்பிட்டுச் சொல்லியிருக்க வேண்டாமோ?''

''சாரி சார்!''

''என்ன சாரி? என்னமோப்பா! கடவுள் புண்யத்துல தான் இந்தக் கம்பெனி ஓடுது!''

''. . . . . . . . ''

''சரி; அவன் பேரு என்ன சொன்னே? யூனியன் செக்ரட்டரி?''

''பெருமாள் சார்!''

''சரி; அவன் வந்தான்னா உடனே வரச் சொல்லு!''

''சரி சார்! டீடெய்ல்ஸ் எல்லாம் கூட ரெடி சார்!''

''என்ன டீடெய்ல்ஸ்?''

''கடந்த அஞ்சு வருஷமா எவ்வளவு போனஸ் குடுத்தோம், எவ்வளவு சம்பள உயர்வு கொடுத்தோம், அதெல்லாம்....''

''அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம்; ஏதாவது வேணும்னா உன்னைக் கூப்பிட்டுக் கேட்டுக்கறேன்.''

''......''

''அவன் கூட வேற யாரும் வர்றாங்களா?''

''ஆமாம் சார், கமிட்டியில் ஒருத்தர் பாண்டியன்னு...''

''அதெல்லாம் ஒருத்தனையும் இப்பப் பார்க்க முடியாது. அவன் ஒருத்தனை மட்டும் உள்ளே அனுப்பினால் போதும்!''

''ரைட் சார்!''

பரசுராமன் தன் இடத்தில் வந்து உட்கார்ந்தான். மூன்று நாட்களாய் இராப்பகலாய்ச் செய்த உழைப்பு வீண்! யூனியனுக்கு எப்படியெல்லாம் பதில் சொல்ல வேண்டும் எவ்வளவு தூரம் அவர்கள் கேட்கும் உயர்வில் நியாயம் இல்லை; அதை எப்படியெல்லாம் குறைக்க முடியும், அவைகளின் விகிதம் என்ன என்று மிகக் கவனமாய் எடுத்து வைத்திருந்த குறிப்பெல்லாம் தவிடு பொடி! இப்படித்தான் அடிக்கடி நேர்கிறது. தான் தயாராய் இல்லாத போது பாய்கிறார்கள். தயாராய் இருக்கும் போது கண்டு கொள்ளாமல் போய் விடுகிறார்கள்... இதே கதைதான் வீட்டிலும் நடக்கிறது. இதற்கு ஏதாவது ஒரு வழி கண்டுபிடித்தே ஆக வேண்டும்...

யூனியன் செயலாளர் பெருமாள் எம்.டி. அறை வாசலில் இருந்த சோபாவில் உட்கார்ந்திருந்தார். எம். டி. கேட்கப் போகும் கேள்விகளையும் தாம் சொல்லப் போகும் பதில்களையும் ஒரு தடவை ஒத்திகை பார்த்துக் கொண்டார். தங்களுடைய பத்து கோரிக்கைகளில் ஆறு நிறைவேறிவிட்டால் கூடப் போதும். அதுவே ஒரு வெற்றிதான். இன்னும் இரண்டு மாதங்களில் தேர்தல் வருகிறது. இதைக் காண்பித்தே ஓட்டு வாங்கி விடலாம். அப்புறம் மூன்று வருஷங்களுக்கு இந்தக் கம்பெனியில் தம்மை யாரும் அசைக்க முடியாது. அந்த மூன்று வருடங்களுக்குள் வீட்டைக் கட்டி முடித்துவிட வேண்டும். கார் ரொம்பவும் பழசாகி விட்டது. எம். டி. மனம் வைத்தால் புதுக் காரே தருவார். ஆனால் இப்போது ஏதும் மூச்சு விடக் கூடாது. இது வெண்ணெய் திரண்டு வரும் நேரம். தொழிலாளர்களும் சரி, மேனேஜ்மெண்டும் சரி, தன்னை நம்பியாக வேண்டும். இரண்டு இடத்துலயும் நல்ல பேர் எடுக்க வேண்டும். அதுதான் முக்கியம். தான் நல்லவனா கெட்டவனா என்பது அல்ல முக்கியம். நல்ல பேர் முக்கியம். தன்னை நம்பியிருக்கும் ஆயிரம் தொழிலாளர்களும் தன்னை மறுபடியும் நம்ப வைக்க வேண்டும். இந்த ஒரு தொழிற்சாலையில் அந்தக் கொடியை ஏற்றி விட்டால் அப்புறம் சுற்றியிருக்கும் எல்லாத் தொழிற்சாலைகளிலும் இந்த நம்பிக்கைத் தீ பற்றிக் கொள்ளும். அப்போது தான் கட்சி மேலிடத்தின் பார்வை தன் மேல் படும். அந்த ஒரு நிமிஷப் பார்வை போதும். அப்புறம் அமைச்சர் வரை மளமளவென்று ஏறிவிடலாம். எவ்வளவு தூரம் வரை வேண்டுமானாலும் ஏறலாம்...

யூனியன் செயலர் பெருமாள் கதவை

லேசாகத் தட்டிவிட்டு எம்.டி.யின் அறைக்குள் நுழைந்தார்...

"வாய்யா பெருமாள்! எப்படி இருக்கே?"

"நல்லா இருக்கேன் சார்!" —பெருமாள் ஒரு பெரிய கும்பிடு போட்டுவிட்டு அவர் எதிரில் உட்கார்ந்தார்.

"சொல்லுய்யா!" என்றார் எம்.டி.

"நம்ம கோரிக்கையெல்லாம் படிச்சிருப்பீங்க; நீங்கதான் சொல்லணும்!"

"படிச்சேன், படிச்சேன்! அதுல ரெண்டு பாயிண்டுதான் பேசணும்."

"சொல்லுங்க!"

"இந்த... இறந்து போனவங்க குடும்பத்துக்கு நிதின்னு ஒரு க்ளாஸ் வருது. அது ஏற்கெனவே கம்பெனி செய்துக்கிட்டுத்தான் வருது. ஆனால் அதை ஒரு நிபந்தனை மாதிரி ஏத்துக்க முடியாது."

"சரிங்க."

"அப்புறம் இந்த கேஷுவல்ஸ். தற்காலிகமா இருக்கிறவங்களை நிரந்தரமா ஆக்கறது பத்தி உங்களுக்கு என்ன ஆச்சு? உங்க டிமாண்ட்ஸ் எதையும் நான் மறுக்கலே. ஆனா அவனுங்களுக்கு நீங்க ஏன் வக்காலத்து வாங்கணும்? அது மட்டும் முடியாது!"

"சரிங்க!"

"அவ்வளவுதான்! உங்களுடைய மற்ற அத்தனை டிமாண்டும் ஓ.கே! சரிதானே?"

"ரொம்ப சந்தோஷமுங்க!"

பெருமாள் எழுந்து கொண்டார். நாளை சென்னை நகரம் முழுவதும் அவருடைய படம் போட்ட போஸ்டர்கள் வெற்றி வெற்றி என்று அலறும். யூனியன் ஆபீஸில் ரோஜா மாலைகள் இடம் கொள்ளாமல் மணக்கும். மாலையில் தொழிற்சாலை வாசலில் நடக்கும் கமிட்டி மீட்டிங்கில் தான் எப்படியெல்லாம் வாதாடி இதைப் பெற்றோம் என்று சாமர்த்தியமாய்ப் பேச வேண்டும். மெஷின் ஷாப் பிரிவில் வேலை பார்க்கும் தமிழ்க் கடல் என்கிற பையனை விட்டு ஏதாவது கவிதை மாதிரி அடுக்கு மொழியில் எழுதித் தரச் சொல்லி மனப்பாடம் செய்து கொள்ள வேண்டும். தலைவர் வசிக்கும் ஏரியாவில் மட்டும் கொஞ்சம் போஸ்டர்களை அதிகமாக ஒட்டச் சொல்ல வேண்டும்...

**அ**ந்தப் பெரிய இயந்திரத்துக்கு முன்னால் சபாபதி உட்கார்ந்திருந்தார். இயந்திரத்தின் சத்தம் சற்று அதிகமாய் இருந்தாலும் சபாபதிக்குப் பழகிப் போன ஒன்று. இரண்டு கைகளாலும் ஓர் இரும்பு உருளையை முன்னும் பின்னும் நகர்த்தி நகர்த்தி 'பொஸிஷன்' பார்த்துக் கொண்டிருந்தார். அது சரியான இடத்தில் உட்கார வேண்டும். அப்புறம் மேலேயிருந்து கீழிறங்கும் இரண்டு கூரான ஊசிகள் அதன் தலையில் சரியான இடத்தில் துளை போட வேண்டும். சிறிது பிசகினாலும் ஊசி ஒடிந்து விடும். உருளையில் சேதம் ஏற்படக் கூடும். ஆனால் அப்படி ஏதும் நேரவில்லை. இது இருபது வருஷங்களாகப் பழகிப் போன வேலை. சபாபதி அதில் 'எக்ஸ்பர்ட்' சான்றிதழ் பெற்றிருக்கிறார். வேறு யாராலும் முடியாத வேலை என்கிற கர்வமும் அவருக்கு உண்டு. அந்த மெஷின் அவர் சொன்னால் மட்டும்தான் கேட்கும். போன வருஷம் உடம்பு சுகம் இல்லாமல் லீவில் இருந்தபோது கேசவலு இதனிடம் நெருங்கி ஏராளமாய்ச் சேதம் உண்டு பண்ணிவிட்டான். முன்பெல்லாம் அதிகமாய்ச் செய்து ஊக்க ஊதியம் கூடப் பெற முடிந்தது. இப்போது முடியவில்லை. இருந்தாலும் தன்னை மிஞ்ச இங்கு ஆளில்லை. இது முதலாளி வரைக்கும் எல்லோருக்கும் தெரியும். இந்த மெஷினுக்கும் தெரியும். நேற்று படித்துவிட்டு வேலைக்குச் சேர்ந்த சின்னப் பையன்களெல்லாம் அவரை ஒன்றும் சொல்லிவிட முடியாது. அவர் இந்தக் கம்பெனியின் சொத்து. முதலாளி சிறு பையனாய் அவர் அப்பாவோடு வரும் வயதில் இருந்து இந்தத் தொழிற்சாலையையும் அவரையும் தெரியும். தொழிற்சாலையில் நுழைந்தவுடன் முதலில் தன்னைத்தான் விசாரிப்பார். அதிலும் சபாபதிக்குப் பெருமிதம் உண்டு. இன்று தொழிலாளர் சங்கம், யூனியன் கமிட்டி என்றெல்லாம் பெரிதாகி விட்டது. அந்தக் காலத்தில் இங்கு ஒரு டீ கூடக் கிடைக்காத பொட்டல் காடாக இருந்தபோது முதலாளி வீட்டில் இருந்தே டீ வரும். ஐம்பது அறுபது பேரோடு அவரும் வேலை செய்வார். இன்று பெரிய ஆலமரம் போல வளர்ந்து விட்டது. இது அந்தக் கால உப்பைத் தின்று வளர்ந்த உடம்பு. அந்தக் காலத்தின் உழைப்புத்தான் இன்று பலருக்கு நிழலாய் இருக்கிறது. இது அந்த உடம்புக்குத்தான் தெரியும்...

"**எ**ன்ன பெரியவரே, சௌக்கியமா?" என்று பெரிய கும்பிடு போட்டுக் கொண்டே அவர் அருகில் வந்தார் யூனியன் தலைவர் பெருமாள்.

"சௌக்கியம்தான்," என்று பதிலுக்கு வணக்கம் தெரிவித்தார் சபாபதி.

சபாபதிக்கு வணக்கம் சொன்னால் பலன் உண்டு. அவர் சொன்னால் இங்கு மற்றவர்கள் கேட்பார்கள். இவர்களுக்குச் சபாபதி மேல் இருக்கும் மரியாதையை உபயோகப்படுத்திக் கொள்ள வேண்டும். தேர்தல் வருகிறது. சபாபதியைத் தனியே அவர் வீட்டில் சந்தித்து இதுபற்றி உதவி கோர வேண்டும். இவரிடம் மரியாதையாய்ப் பழக வேண்டும்.

"அப்ப நான் வரேங்க! உங்களுக்கு எப்பவும் வேலைதான் முக்கியம்! இந்தக் கம்பெனியில் உங்களை மாதிரி உழைக்கிறவங்க ஒரு நாலு பேர் இருந்துட்டா போதும். நம்ம கம்பெனியைக் கட்டிப்பிடிக்க முடியாது... அப்ப நான் வர்றேங்க..."

"செய்யுங்க!" என்று பதிலுக்குச் சொல்லிவிட்டு நெற்றியில் இருந்த வியர்வையை வலது கைக்கட்டைவிரலால் வழித்துத் தரையில் உதறினார் சபாபதி.



# எதிர்க்கட்சித் தலைவரின் புதிய அந்தஸ்து!

'விடுதலைப் போரும் திராவிட இயக்கமும்' என்ற நூலில் அண்மையில் மறைந்த கம்யூனிஸ்ட் தலைவர் பி. ராமமூர்த்தி எழுதுகிறார்:

உங்கள் குடும்பத்தார் அடிக்கடி ஜெயிலுக்குப் போய்க் கொண்டிருக்கும் இந்த வாழ்க்கைக்குச் சம்மதித்தார்களா?'' என்று கேட்டார் பெரியார்.

''முதலில் என் தாயாரும் அண்ணாவும் வருத்தப்பட்டார்கள். ஆனால் இப்பொழுது என் தாயார் வருத்தப்படுவதற்குப் பதிலாக நான் மக்களுக்காக உழைக்கிறேன் என்பதில் பெருமிதம் கொண்டுள்ளார்கள். மன நிம்மதியாகவும் மகிழ்ச்சியாகவும் இருக்கிறார்கள்'' என்று கூறினேன்.

''பெரியார் அதோடு விட்டுவிடவில்லை. 'நீங்கள் ஒரு பிராமணப் பிள்ளையாக இருக்கிறீர்களே, வயது முப்பது இருக்கும் போலிருக்கிறதே! கல்யாணம் ஆயிற்றா?' என்று கேட்டார். நான், 'இல்லை' என்றேன்.

''உங்கள் ஜாதியில் இருபது வயதிலேயே திருமணம் செய்து வைப்பார்களே; கூடிப் போனால் இருபத்திரண்டு வயதிற்கு மேல் விட்டு வைக்க மாட்டார்களே!'' என்றார்.

''கல்யாணம் செய்து வைக்க விரும்பினார்கள். முயற்சியும் செய்தார்கள். நான்தான் மறுத்து விட்டேன்'' என்றேன்.

ஏன்? இயக்கத்தில் ஈடுபடும் வரை கல்யாணம் செய்யாமலிருப்பது என்று முடிவு செய்து விட்டீர்களா?'' என்று கேட்டார்.

''அப்படி ஒன்றும் இல்லை. நான் ஜாதியில் நம்பிக்கை இல்லாதவன். வேறு ஜாதிப் பெண்ணை நான் திருமணம் செய்து கொண்டால் என் தாயாருக்கு மனம் நொந்து போகும். அவர் படிக்காதவர். பழைய வைதீகக் குடும்பத்திலேயே வளர்ந்தவர். நான்படிப்பில்கெட்டிக்காரனாகஇருப்பதைக் கண்டு பெரிய உத்தியோகத்திற்கு வருவேன் என்று கனவு கண்டு கொண்டிருந்தார். அந்த ஆசை பங்கமடைந்தது. ஆயினும் இப்பொழுது என் தாயார், பொது வாழ்வில் என்னை ஊக்குவித்துக் கொண்டிருக்கிறார். அவர் மனத்தை நான் புண்படுத்த விரும்பவில்லை. என் தாயார் மறைந்த பிறகுதான் நான் திருமணம்செய்து கொள்வதாக முடிவு செய்துள்ளேன்'' என்று கூறினேன்.

பெரியார் மகிழ்ச்சியடைந்தார். அந்த மகிழ்ச்சியில், 'நீங்கள்' என்னும் பாணியை விட்டுவிட்டு, ''தம்பி, நீ செய்த முடிவு நல்ல முடிவு. உன் தாயாரை நான் மெச்சுகிறேன். உனக்கு ஊக்கமளித்து வரும் தாயாரைப் போலப் பழைய காலத்துத் தாய்மார்களைக் காண்பது அரிது. அவர்களுடைய மனம் புண்படக்கூடாது என்று நீ விரும்புவதை மெச்சுகிறேன். நீ எப்பொழுதாவது கல்யாணம் செய்து கொண்டால், அப்பொழுது நானிருந்தால் கட்டாயம் அதற்கு வருவேன்'' என்று தாமாகவே கூறினார்.

1951—ஆம் ஆண்டு நான் தலைமறைவாக இருந்தபோது, என் தாயார் இறந்து விட்டார்.

1952—இல் நான் சட்டசபையில் எதிர்க்கட்சித் தலைவராக இருந்தபோது காலை 10.30 மணிக்கு ரிஜிஸ்ட்ரார் அலுவலகத்திற்கு நானும் என் துணைவியாரும் இரண்டு சாட்சிகளுடன் சென்று எங்கள் திருமணத்தைப் பதிவு செய்தோம். அது முடிந்தபின், 11.15 மணிக்கெல்லாம் பட்ஜெட் விவாதத்திற்கு வந்து விட்டேன். அந்த விஷயம் அன்று நிதியமைச்சர் சி. சுப்பிரமணியத்துக்குத் தெரிந்து விட்டது. அவர், விவாதத்திற்குப் பதிலளிக்கும் போது, ''எதிர்க்கட்சித் தலைவரின் புதிய அந்தஸ்துக்காக அவரை வாழ்த்துகிறேன்'' என்று உரையைத் துவக்கினார். பிறகு சபையோர், ''என்ன புதிய அந்தஸ்து?'' என்று கேட்டதற்கு அவர், ஒரு மணி நேரத்திற்கு முன் என் திருமணம் நடந்தேறியதைச் சொன்னார்.

அவசர அவசரமாக அன்று மாலை ஒரு சத்திரத்தில் எளிய முறையில் சட்டசபை உறுப்பினர்களாகிய நண்பர்களும், தோழர்களும் தேநீர் விருந்து ஒன்று ஏற்பாடு செய்தனர். அதைப் பிற்பகல் பெரியாரிடம் தெரிவித்தேன். அந்தத் தேநீர் விருந்துக்கு அவர் முதலிலேயே வந்து விட்டார். மேடை போடச் சொல்லி மற்றவர்கள் வந்தவுடன் சொற்பொழிவாற்றி எங்களை வாழ்த்தினார்.

தொகுப்பு: கௌசல்யா

# கோகுலம்

ஜனவரி 88 இதழில்...

தம்பி, தங்கைகளுக்கு
கிறிஸ்துமஸ், புத்தாண்டு
வாழ்த்துக்கள்!



குழந்தைக் கவிஞர்:
— யார் அழகி?



டாக்டர் பி. ராமமூர்த்தி:
— என் குழந்தைப் பருவம்

நகைச்சுவைக் கதை:
— கைரே, பைரே!



டாக்டர் பக்கம் :: வந்தேமாதரத்தின் கதை :: பிருந்தாவனப் பக்கங்கள்




## மிருத சஞ்சீவினி மந்திரம்

# குடியரசு தினத்தில் கறுப்புச் சின்னம் அணிவீர்களா?







கடவுள் உதவட்டும்!



பதிலடி



* ப. சுகுமார் ராஜ், தூத்துக்குடி — 1.

? 'ராமாயண் தொடர் மதச்சார்பற்றது' என்கிறாரே அஜித் பாஞ்சா?

! உண்மைக்குப் புறம்பாக எப்படித்தான் இவ்வளவு பகிரங்கமாகப் பேசுகிறாரோ! ஆச்சரியமாக இருக்கிறது. மதச்சார்பின்மை என்பதை மதங்களைப் புறக்கணித்தல் என்று அரசு அர்த்தம் பண்ணிக் கொண்டதால் வந்த வினைதான் இது. எம்மதமும் சம்மதம் என்ற அர்த்தத்தை ஏற்றால் பாஞ்சா அஞ்ச வேண்டியிராது.

* க. தியாகராஜன், நெய்வேலி.

? 'இந்தப் பஞ்சாப் பிரச்னையை என்னிடம் தீர்க்கச் சொல்லிச் சொன்னால், ஐந்தே நிமிடங்களில் தீர்த்து விடுவேன்; எல்லா இந்திய மக்களின் நல்லாசிகளுடனும் பஞ்சாபுக்குச் சுதந்திரம் கொடுத்து விடுவேன்' என்று கூறும் ரஜினீஷ் கூற்று பற்றி?

! • 1. நல்லவேளையாகப் பஞ்சாப் பிரச்னையைத் தீர்த்து வைக்கும்படி இவரை யாரும் கேட்டுக்கொள்ளவில்லை. அதற்குரிய அதிகாரத்தை மக்கள் இவருக்கு வழங்கவில்லை. 2. இவரது தீர்ப்புக்குப் பாரத மக்களின் நல்லாசிகள் கிடைக்கும் என்பது இவருடைய கற்பனையேயன்றி வேறில்லை. 3. தமக்குத் தாமே அட்சதை போட்டுக் கொண்டு பஞ்சாப் பிரச்னையைத் தீர்த்து வைக்க முன் வராமல் முதலில் இவர் தமக்குள்ள ஏராளமான சொந்தப் பிரச்னைகளைச் சமாளித்து மீண்டு வரட்டும்.

* கே. ஆர். விடியல் கோபி, கும்பகோணம்.

? ஆங்கிலத்தைச் சாடிய பாரதியார் இந்தியை எதிர்க்கவில்லையே, ஏன்?

! அக்கால கட்டத்தில் இந்தியை யாரும் பிறர் மீது கட்டாயத் திணிப்பு நிகழ்த்தவில்லை. அதனால் பாரதியும் அதை எதிர்க்க வேண்டிய — சாட வேண்டிய அவசியமில்லாமல் போய்விட்டது. 'யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழி போல் இனிதாவது எங்கும் காணோம்' என்று தமிழைச் சிறப்பித்துப் பாடினாலும் பாரதியாருக்கு எந்த

வொரு மொழியின் மீதும் தனிப்பட்ட விரோதம் இல்லை. ஆங்கிலத்தைச் சாடியதற்குக் காரணம், வெள்ளைக்காரர்கள் என்னும் 'எஜமானர்'களால் அது நம் மீது திணிக்கப்பட்டதுதான். நம்மை அடிமைப் படுத்துகிற மொழி என்று அதனைக் கருதினர். ஆனால் சர்வ வல்லமை பொருந்திய அந்த மொழி இன்று நமக்கு அடிமையாகி ஊழியம் செய்யக் காத்திருக்கிறது என்பதை நாம் மறக்கக் கூடாது.

* கே. டி. ஆர். சேகர், விருதுநகர். *

? குடியரசு தினத்தன்று கறுப்புச் சின்னம் அணிவதாக உங்களுக்கு உத்தேசம் உண்டா?

! ஆயிரம் காரணங்கள் கூறப்பட்டாலும் இந்திய தேசம் என்ற ஒன்றை ஒப்புக் கொண்டு விட்ட நிலையில் குடியரசு, சுதந்திர தினங்களில் கறுப்புச் சின்னம் அணிவதென்பது தேச பக்திக்கு விரோதமான செயலே. அரசின் ஒரு கொள்கைக்கு எதிர்ப்புத் தெரிவிக்க எந்த ஒரு விசேஷத்தையும் உள்ளடக்காத ஏதேனும் ஒரு தேதியைக் குறிப்பிட்டு துக்கதினம் அனுஷ்டித்தால் யாரும் ஆட்சேபிக்க முடியாது. மேலும் குடியரசு தினத்தன்று ஜெயவர்த்தன புதுதில்லி வருவது ஊர்வலம் பார்க்க மட்டுமல்ல; பேச்சு வார்த்தைகளும் நடக்கும். அதன் விளைவாக ஈழத் தமிழருக்கு நன்மைகளும் ஏற்படக் கூடும் அல்லவா?

* க. நக்கீரன், குடியேற்றம்.

? நான் நிறையக் கேள்விகளை எழுதிப் போடுகிறேன். ஆனால் ஒன்று கூட பிரசுரமாவதேயில்லை. கொஞ்சம் ஆர்வத்தை வளர்த்து விடுங்கள் ஐயா.

! இப்படித்தான் ஏராளமான வாசகர்கள் தங்கள் கேள்விகளுக்குப் பதில் சொல்லப் படுவதில்லை என்று வருத்தப்படுகிறார்கள். உண்மையில், உங்கள் கேள்விகள்தான் என்னைப் பதில் சொல்லத் தூண்டும்படியானதாக இருக்க வேண்டும் என்பதை ஏன் மறந்து விடுகிறீர்கள்?

* எம். ராஜேந்திரன், வால்குடி.

? சாமிக்காக நாக்கை அறுத்துக் கொள்வது முட்டாள்தனம் என்றால், மொட்டை அடித்துக் கொள்வது?

! 'மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம் பழித்தது ஒழித்து விடின்' என்று வள்ளுவன் கூறியதற்கு மேல் யார் என்ன சொல்ல இருக்கிறது?

* சைதை வி. முரளி, சென்னை — 15.

? 'தேச விரோதமாகச் செயல்படும் மாநில அரசுகள் டிஸ்மிஸ் செய்யப்படும்' என்று பிரதமர் சொல்லியிருக்கிறாரே?

! 'பிறரின் தேச பக்தியைப் பற்றி விமர்சனம் செய்வதற்கு முன், ராஜீவ் தமது தேச பக்தியை நிரூபிக்க வேண்டும்' என்று வி. ஆர். கிருஷ்ணய்யர் அற்புதமாகப் பதிலடி கொடுத்திருக்கிறாரே! மற்ற நாடுகளோடு கூட்டுச் சேர்ந்துள்ள இந்தியத் தொழில்



நிறுவனங்களுக்கு ஆகும் செலவுகளை விட இத்தாலிய நாட்டுடன் கூட்டுச் சேர்ந்துள்ள இந்தியத் தொழில் நிறுவனங்களுக்கு ஆகும் உற்பத்திச் செலவுகள் பல மடங்கு அதிகம் என்று உலக வங்கியின் ஓர் அறிக்கையே கூறுகிறதே. இதுவா இந்திய தேச பக்தி?

* அர. மணிவண்ணன், சென்னை — 16.

? 'படித்து வேலையில்லாமல் இருப்பவர்களுக்கு வேலை கிடைக்கும் வரை உதவித் தொகை வழங்க வேண்டும்' என்று பாராளுமன்றத்தில் ஏ. சி. சண்முகம் கோரிக்கை விடுத்துள்ளாரே?

! உதவித் தொகை வழங்குவதைவிட, வேலை வாய்ப்புக்களைப் பெருக்கும் விதமாக அரசின் தொழில் — பொருளாதாரக் கொள்கைகள் மாறுவதும், குமாஸ்தா பட்டாளத்தை உருவாக்காமல் சுய வேலை வாய்ப்புக்களைப் பெருக்கும் விதமாகத் தொழில் கல்வி அளிப்பதும்தான் முக்கியம்.

* அ. அருள், இராமேஸ்வரம்.

? அமெரிக்க வெள்ளை மாளிகையில் கொடுக்கப்பட்ட வரவேற்பில் ரஷ்ய அதிபர் கோர்பசேவ் கூறிய 'கடவுள் நமக்கு உதவட்டும்,' என்ற வார்த்தைகள் பற்றி?

! கம்யூனிஸத்தின் தந்தையான கார்ல் மார்க்ஸ் கூட மதத்தைத்தான் ஓர் அபின் என்று வர்ணித்திருக்கிறாரே தவிர, கடவுளை அல்ல. கடவுளின் பெயரால் நடக்கும் மோசடிகளைத்தான் கம்யூனிஸம் சாடுகிறது நண்பரே!

* ஆர். கே. அருள்செல்வன், விக்கிரபாண்டியம்.

? மனிதனைச் சிந்திக்க வைப்பது வெற்றியா, தோல்வியா?

! வெற்றியால் மயங்கினாலும் சிந்தனை போய் விடும்; தோல்வியால் துவண்டு போய்ச் சோர்ந்தாலும் சிந்தனை போய்விடும். எனவே, இவை இரண்டாலும் பாதிக்கப் படாத மனமே சிந்தனையின் விளைநிலம்.

* நெல்லை அறிவரசு, சென்னை — 49.

? மழை பொய்த்தாலும், அதிகமாகப் பெய்தாலும் விவசாயி பாதிக்கப்படுகிறான். ஆனால் அரசியல்வாதி?

! எதிர்க்கட்சியாகும்போது மட்டும்தான் பாதிக்கப்படுகிறான்!

* ரூ. 15 பரிசு பெறுபவர்:

கே. டி. ஆர். சேகர்,
மலர்விழி மருத்துவமனை,
106, வீரபத்ரன் தெரு,
விருதுநகர் — 1.





# அருள் தரும் ஐயப்பன்

பாண்டியன், ஐயப்ப பக்தர் ரஞ்சனியைக் காதலிக்கிறார்.

ரஞ்சனியின் பணக்காரத் தந்தை கல்யாணத்திற்கு மறுப்பே சொல்லாமல் ஒப்புக் கொள்கிறார். என்னடா இது, இப்படி ஒரு பெருந்தன்மையான பணக்கார அப்பாவா என்று நினைத்து முடிப்பதற்குள் அடிக்கிறார் ஒரு பல்டி!

ஐயப்பனை தரிசித்து வரக் கிளம்பும் பாண்டியனைத் தீர்த்துக்கட்ட ஒரு கூலிப்பட்டாளத்தை ஏவி விடுகிறார். அந்தக் கூலிப் பட்டாளமும், பாண்டியன் சாமியைத் தொடர்ந்து ஒவ்வொரு கொலை முயற்சியின் போதும் தோற்றுப் போய்—

கடைசியில் ஐயப்பசாமியே பாண்டியன் சாமிக்குவக்காலத்துவாங்கி உதவத்தொடங்கி ரஞ்சனிக்குப் பக்கவாதம். பணக்காரத் தந்தையின் மனமாற்றம். பாண்டியன், ரஞ்சனியின் 'டும் டும் டும்' என்ற சுபமான முடிவு வரை கதை.

நடுவில் நிழல்கள் ரவி கிளை நதி— ராஜீவ் கிளை நதி என்று பிரித்து விட்டு இரண்டையும் கொஞ்சம் கலகல என்று ஓடவிட்டுக் கடைசியில் ஒரிஜினல் கதையில் மறுபடி வந்து சேர்ந்து கொள்ளச் செய்கிறார்கள்.

சுவாமி படம் என்று கால்ஷீட் கேட்டால் யாரும் மறுக்க முடியாத தர்மசங்கடமா சூழ்நிலை வந்துவிடுமோ என்னவோ! பாண்டியன், ரஞ்சனி, நிழல்கள் ரவி, ரேகா, பபிதா, ராஜீவ், ஸ்ரீப்ரியா, ஸ்ரீவித்யா, எஸ். எஸ். சந்திரன், செந்தில், சரளா... ரகுவரன் போதுமா பட்டாளம்?

ரகுவரன் உருக்கமாய்த்தான் பாடி இருக் கிறார். ஆனால் அந்தப் பாடல் காட்சிக் மட்டும்தானா அவர்?

எஸ். எஸ். சந்திரன், செந்தில், போலி சாமிகள். அவர்கள் விஷயத்தில் ஐயப்பன் கலகல நகைச் சுவையைக் கலந்து, நின்று தண்டித்து விடுகிறார். தண்டனை கொஞ்சம் மிகைதான் என்றாலும் சாமி படம் என்ப தால் புன்சிரிப்போடு ஒப்புக் கொள்ள வேண்டியதுதான்.

கதை, திரைக்கதை, டைரக்ஷன் உட்பட பல்வேறு டிபார்ட்மெண்ட்களைக் கையாண்டிருக்கும் தசரதன், படத்தை இந்த சீசனில் வெளியிட்டிருப்பதிலும் கொஞ்சம் புத்தி சாலித்தனத்தைக் கையாண்டிருக்கிறார். தாய்மார்களும், ஐயப்பசாமிகளும் இந்த 'சாமி பட' முத்திரைக்காகவே ஒரு முறை பார்த்து விடுவார்கள்.

— ஜெயமன்மதன்

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக
வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: 431543, 434157
ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை — 600 034
போன்: 473389.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 280/-; விமானத் தபால் ரூ. 680/-
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 140/-; விமானத் தபால் ரூ. 340/-




REGISTERED No. M. 4362
Registered as a Newspaper in Sri Lanka

பிலிப்







## ிலிப்ஸ் வீட்டுபயோக சாதனங்கள்...



பிலிப்ஸ் குடும்பத்தின் வீட்டுபயோக சாதனங்களைப் பாருங்கள்: பிலிப்ஸ் குவார்ட்ஸ் சுவற்றுக் கடியாரங்கள் மற்றும் அலாரம் கடியாரங்கள். பிலிப்ஸ் எலெக்ட்ரிக் இஸ்த்திரிப்பெட்டி— இலேசான எடை. ஆட்டோமேட்டிக்! பிலிப்ஸ் இன்ஃப்ராஃபில். பிலிப்ஸ் மிக்ஸர் கிரைண்டர்—அத்துடன் விருப்பத் தேர்வுக்கான அட்டாச் மெண்ட்டுகள். ஒரு சென்ட்ரிஃப்யூகல் ஜூஸர் மற்றும் டிரை கிரைண்டர்.



அத்துடன் பிலிப்ஸின் புதிய சாதனம்— சிட்ரஸ் பிரஸ்; கணத்தில் சாறு பிழிய.

வாருங்கள் பிலிப்ஸ் குடும்பத்திற்கு! வாங்கிச் செல்லுங்கள் உங்கள் வீட்டிலே அற்புதமாய் செயலாற்றக் கூடிய சாதனங்களை. .

...அவை உங்களோடு வாழ்நாள் முழுதும் வாழும் மங்களமாய்!



## பிலிப்ஸ் எனும்போது தரம் பளிச்சிடும்.